உஅ. பெருமை யுடையாரைப் பீடழித்த லின்னா
கிழமை யுடையார்க்* களைந்திடுத லின்னா
வளமை யிலாளர் வனப்பின்னா வின்னா
இளமையுண் மூப்புப் புகல்.

(பதவுரை) பெருமை உடையாரை - பெருமையுடையவரை, பீடு அழித்தல் - பெருமையழியக் கூறல், இன்னா - துன்பமாம்; கிழமை உடையார் - உரிமை யுடையவரை, களைந்திடுதல் - நீக்கிவிடுதல், இன்னா - துன்பமாம்; வளமை இலாளர்-செல்வமில்லாதவருடைய, வனப்பு-அழகு, இன்னா-துன்பமாம்; இளமையுள் - இளமைப்பருவத்தில், மூப்பு - முதுமைக்குரிய தன்மைகள், புகல்-உண்டாதல், இன்னா-துன்பந் தருவதாகும் எ - று.

பீடு அழித்தல் என்னும் இருசொல்லும் ஒருசொன்னீர்மையெய்தி இரண்டாவதற்கு முடிபாயின. பீடழித்தலாவது பெருமை யுளதாகவும் அதனை யிலதாக்கிக் கூறுதல். கிழமை யுடையார்-பழையராகவரும் அமைச்சர் முதலாயினார்; நண்பரும் ஆம்; 'கிழமை யுடையாரைக் கீழ்ந்திடுத லின்னா' என்று பாடங் கொள்ளுதல் சிறப்பு; 'பழைமை யெனப்படுவ தியாதெனின் யாதுங்-கிழமையைக் கீழ்ந்திடா நட்பு' என்னுந் திருக்குறளுங் காண்க. வளமை—வண்மையுமாம். (உஅ)

உகூ. கல்லாதா னூருங் கலிமாப் பரிப்பின்னா
வல்லாதான் சொல்லு முரையின் பயனின்னா
இல்லார்வாய்ச் சொல்லி னயமின்னா வாங்கின்னா
கல்லாதான் கோட்டி கொளல்.

---

* கிழமை யுடையாரை என்றும் பாடம்.

(பதவுரை) கல்லாதான் - (நடத்தவேண்டிய முறையைக்) கல்லாதவன், ஊரும் - ஏறிச் செலுத்தும், கலிமா - மனஞ் செருக்கிய குதிரை, பரிப்பு-(அவனைச்) சுமந்து செல்லுதல், இன்னா-துன்பமாம்; வல்லாதான்-கல்வி யில்லாதவன், சொல்லும்-சொல்லுகின்ற, உரையின் பயன்-சொல்லின் பொருள், இன்னா - துன்பமாம்; இல்லார் - செல்வமில்லாதவருடைய, வாய்ச் சொல்லின்-வாயிலிருந்து வரும் சொல்லினது, நயம்-நயமானது, இன்னா-துன்பமாம்; ஆங்கு-அவ்வாறே, கல்லாதான்-கல்வி யில்லாதவன், கோட்டி கொளல்-கற்றவரவையில் ஒன்றைக் கூறுதல், இன்னா-துன்பமாம் எ - று.

கலி-ஆரவாரமும் ஆம். வல்லாதான்-ஒன்றனைச் செய்ய மாட்டாதான் எனினும் அமையும். இல்லார் வாய்ச்சொல்லின் நயமின்னா என்பதனை 'நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்-சொற்பொருள் சோர்வு படும்' என்னுந் தமிழ்மறையானு மறிக. கோட்டி கொளல்-ஒருசொல்; அவையின்கண் பேசுதல் என்னும் பொருளது; 'அங்கணத்துளுக்க...கோட்டி கொளல்' என்பதுங் காண்க. (உக)

௩௰. குறியறியான் மாநாக* மாட்டுவித்த லின்னா
தறியறியா† னீரின்கட் பாய்ந்தாட‡ லின்னா
அறிவறியா மக்கட் பெறலின்னா வின்னா
செறிவிலான் கேட்ட மறை.

(பதவுரை) குறி அறியான்-(பாம்பாட்டுதற்குரிய மந்திர முதலியவற்றின்) முறைகளை அறியாதவன், மாநாகம்-பெரிய பாம்பினை, ஆட்டுவித்தல்-ஆடச்செய்தல், இன்னா-துன்பமாம்;

* மாணகம் என்றும் பாடம்.

† இன்னா தறிவறியான் என்றும் பாடம்.

‡ கீழ் நீர்ப்பாய்ந் தாடுதல் என்றும் பாடம்.

தறி அறியான் - உள்ளிருக்கும் குற்றியை அறியாமல், நீரின் கண்-நீரில், பாய்ந்து ஆடல்-குதித்து விளையாடுதல், இன்னா-துன்பமாம்; அறிவு அறியா - அறிய வேண்டுவனவற்றை அறியமாட்டாத, மக்கள் - பிள்ளைகளை, பெறல் - பெறுதல்; இன்னா-துன்பமாம்; செறிவு இல்லான்-அடக்கம் இல்லாதவன், கேட்ட மறை-கேட்ட இரகசியம், இன்னா-துன்பமாம் எ - று.

தறி-குற்றி; கட்டை. அறிவறியான் என்னின் அறிவு வறியனாயினான் ஆவது கல்லாவிளமையன் என்க; 'அறி கொன்று' என்புழிப்போல ஈண்டு அறியென்பது முதனிலைத்தொழிற் பெயர். அறிவறியா மக்கள்-அறியவேண்டுவன அறியமாட்டாத மக்கள்; 'அறிவறிந்த மக்கள்' என்பதற்குப் பரிமேலழகர் கூறிய பொருளை நோக்குக. செறிவு அடக்கம்; 'செறிவறிந்து சீர்மை பயக்கும்' என்னுங் குறளில் செறிவு இப்பொருட்டாதல் காண்க. அடக்கமில்லாதவன் மறையினை வெளிப்படுத்தலின் 'கேட்ட மறையின்னா' என்றார். (௩௰)

௩௧. நெடுமர நீள்கோட் டுயர்பாய்த லின்னா*
கடுஞ்சின வேழத் தெதிர்சேற லின்னா
ஒடுங்கி யரவுறையு மில்லின்னா வின்னா
கடும்புலி வாழு மதர்.

(பதவுரை) நெடு மரம் - நெடிய மரத்தினது, நீள் கோட்டு-நீண்ட கிளையின், உயர்-உயரத்திலிருந்து, பாய்தல்-கீழே குதித்தல், இன்னா-துன்பமாம்; கடும் சினம் - மிக்க கோபத்தினையுடைய, வேழத்து எதிர்-யானையின் எதிரே,

* நெடுமாநீள் கோட்டுயர் பாஅய்தலின்னா என்றும் பாடம்.

சேறல் - செல்லுதல், இன்னா - துன்பமாம்; அரவு - பாம்பு ஒடுங்கி உறையும் - மறைந்து வசிக்கின்ற, இல் - வீடானது, இன்னா-துன்பமாம்; கடும் புலி-கொடிய புலிகள், வாழும் அதர்-வாழ்கின்ற வழியானது, இன்னா-துன்பமாம் எ - று.

கோட்டுயர் பாய்தல் என்பதற்குக் கோட்டின் நுனியி லேறியதோ டமையாது மேலும் பாய்ந்து சேறல் என்று பொருள் கூறலுமாம்; 'நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கி-னுயிர்க்கிறுதி யாகி விடும்' என்பது ஈண்டு நோக்கற் பாலது. நெடுமா நீள்கோட்டுயர் பாய்தல் முதலிய நான்கற்கும், ஒட்டென்னும் அணிபற்றி, முறையே தம்வலியளவறியாது பெரிய வினைமேற் சேறலும், வலியார்க்கு மாறேற்றலும், உடம்பாடிலாத உட்பகையுடன் வாழ்தலும், பகைக் கெளியராம்படி நெறியலா நெறியிற் சேறலும் இன்னாவா மெனப்பொருள் கோடலும் பொருந்துமாறு காண்க. (௩க)

௩௨. பண்ணமையா யாழின்கீழ்ப் பாடல்பெரி தின்னா
எண்ணறியா மாந்த *ரொழுக்குநாட் கூற்றின்னா
மண்ணின் முழவி னொலியின்னா வாங்கின்னா
தண்மை யிலாளர்† பகை.

(பதவுரை) பண் அமையா - இசை கூடாத, யாழின் கீழ் - யாழின் கீழிருந்து, பாடல் - பாடுதல், பெரிது இன்னா - மிகவுந் துன்பமாம்; எண் அறியா மாந்தர் - குறிநூல் (சோதிடம்) அறியாத மாக்கள், ஒழுக்கு நாள் கூற்று - ஒழுகுதற்குரிய நாள் கூறுதல், இன்னா - துன்பமாம்; மண் இல் - மார்ச்சனையில்லாத, முழவின் - மத்தளத்தினது, ஒலி - ஓசை,

* எண்ணறிய மாந்தர் என்றும் பாடம்.

† தன்மையிலாளர் என்றும் பாடம்.

இன்னு - துன்பமாம்; ஆங்கு - அவ்வாறே, தண்மை இலாளர் - தண்ணிய குணம் இல்லாதவரது, பகை - பகையானது, இன்னு - துன்பமாம் எ - று.

பண் என்பதனை முதனிலைத் தொழிற்பெயராகக் கொண்டு, இசைக்காரணம் எட்டனு ளொன்று என்னலுமாம். ஒழுகுதற் குரிய நாளாவது கருமங்கட்கு விதிக்கப் பட்டநாள். நற்குணமுடையார் பகையிடத்தும் இனியன செய்தலும், நற்குணமில்லார் நட்பிடத்தும் இன்னு செய்தலும் உடையாராகலின் தண்மையிலாளர் பகை இன்னுவெனப் பட்டது; தீயோர்பால் பகையும் நண்புமின்றி நொதுமலாக விருத்தல் வேண்டுமென அறிக. (நஉ)

நங. தன்னைத்தான் போற்று தொழுகுத னன்கின்னு
முன்னை யுரையார் புறமொழிக் கூற்றின்னு
நன்மை யிலாளர் தொடர்பின்னு வாங்கின்னு
தொன்மை யுடையார் கெடல்.

(பதவுரை) தன்னைத்தான் -(ஒருவன்) தன்னைத்தானே, போற்று து - காத்துக்கொள்ளாது, ஒழுகுதல் - நடத்தல், நன்கு இன்னு - மிகவுந் துன்பமாம்; முன்னை உரையார் - முன்னே சொல்லாமல், புறமொழிக் கூற்று - புறத்தே பழித்துரைக்கும் புறங்கூற்று, இன்னு - துன்பமாம்; நன்மை இலாளர் - நற்குண மில்லாதவரது, தொடர்பு - நட்பு, இன்னு - துன்பமாம்; ஆங்கு - அவ்வாறே, தொன்மை உடையார் - பழமையுடையவர், கெடல் - கெடுதல், இன்னு - துன்பமாம் எ - று.

தன்னைத்தான் போற்றுதலாவது மனமொழி மெய்கள் தீய வழியிற் செல்லாது அடக்குதல். முன்னை - ஐ பகுதிப் பொருள் விகுதி. உரையார் - முற்றெச்சம். மொழிக்கூற்று - ஒருபொரு ளிருசொல். தொன்மையுடையார் கெடல்

என்றது தொன்றுதொட்டு மேம்பட்டுவரும் பழங்குடியினர் செல்வங் கெடுதல் என்றபடி. (௩௩)

௩௪. கள்ளுண்பான் கூறுங் கருமப் பொருளின்னா
முள்ளுடைக் காட்டி னடத்த னனியின்னா*
வெள்ளம் படுமாக் கொலையின்னா வாங்கின்னா
கள்ள மனத்தார் தொடர்பு.

(பதவுரை) கள் உண்பான் - கட் குடிப்பவன், கூறும் - சொல்லுகின்ற, கருமப்பொருள் - காரியத்தின் பயன், இன்னா - துன்பமாம்; முள்உடை காட்டில் - முட்களையுடைய காட்டில், நடத்தல் - நடத்தலானது, நனி இன்னா - மிகவுந் துன்பமாம்; வெள்ளம்படு - வெள்ளத்தி லகப்பட்ட, மா - விலங்கு, கொலை - கொலையுண்டல், இன்னா - துன்பமாம்; ஆங்கு - அவ்வாறே, கள்ளம் மனத்தார் - வஞ்ச மனத்தினை யுடையாரது, தொடர்பு - நட்பு, இன்னா - துன்பமாம் எ - று.

மாக்கொலை - விலங்கைக் கொல்லுதல் எனினுமாம்; நீர்ப் பெருக்கிலகப்பட்டு வருந்தும் விலங்கைக் கரையேறவொட்டாது தடுத்துக் கொல்லுதல் இன்னாவாம் என்பதுகருத்து.

௩௫. ஒழுக்க மிலாளர்க் குறவுரைத்த †லின்னா
விழுத்தகு நூலும்‡ விழையாதார்க் கின்னா
இழித்த தொழிலவர் நட்பின்னா வின்னா
கழிப்புவாய் மண்டிலங் கொட்பு.

(பதவுரை) ஒழுக்கம் இலாளர்க்கு-நல்லொழுக்கம் இல்லாதவரிடத்தே, உறவு உரைத்தல்-தமக்கு உறவுளதாகக் கூறு

* நடக்கி னனியின்னா என்றும் பாடம்.

† ஒழுக்கமிலாளர்க் குறைவுரைத்தல் என்றும் பாடம்.

‡ விழித்தகுநூலும் என்றும் பாடம்.

தல், இன்னா-துன்பமாம்; விழுத்தகு நூலும்-சீரிய நூலும், விழையாதார்க்கு - விரும்பிக் கல்லாதார்க்கு, இன்னா-துன்பமாம்; இழித்த தொழிலவர்-இழிக்கப்பட்ட தொழிலையுடையாரது, நட்பு-கேண்மை, இன்னா-துன்பமாம்; கழிப்புவாய் - நல்லாரால் கழிக்கப்பட்ட, மண்டிலம் - நாட்டிலே, கொட்பு-திரிதல், இன்னா-துன்பமாம் எ - று.

ஒழுக்கமிலாளர்க் குறைவுரைத்தல் என்னும் பாடத்திற்கு ஒழுக்க மில்லாதவரை இழித்துரைத்தல் என்று பொருள் கொள்க. இழித்த தொழில்-அறிவுடையோராற் பழிக்கப்பட்ட தொழில். ஈற்றடிக்கு, ஒழுகக் குறைந்த மதியினது செலவு காண்டல் என்றுபொருள் கூறலுமாம். (௩௫)

௩௬. எழிலி யுறைநீங்கி னீண்டையார்க் கின்னா
குழலி னினியமரத் தோசைநன் கின்னா
குழவிக ளுற்ற பிணியின்னா வின்னா
அழகுடையான் பேதை யெனல்.

(பதவுரை) எழிலி-மேகமானது, உறை நீங்கின்-நீரைச் சொரியாதாயின், ஈண்டையார்க்கு - இவ்வுலகத்திலுள்ளவர்க்கு, இன்னா-துன்பமாம்; குழலின் இனிய-புல்லாங்குழலைப்போலும் இனிய, மரத்து ஓசை-மரத்தினது ஓசை, நன்கு இன்னா-மிகவும் துன்பமாம்; குழவிகள் உற்ற-குழந்தைகள் அடைந்த, பிணி-நோயானது, இன்னா-துன்பமாம்; அழகு உடையான்-அழகினை யுடையவன், பேதை எனல்-அறிவில் லாதவன் என்று சொல்லப்படுதல், இன்னா-துன்பமாம் எ - று.

உறை - நீர்த்துளி. 'குழலி னினியமரத் தோசைநன் கின்னா' என்பதன் கருத்து, காற்று ஊடறுத்துச் செல்லுத

---

* குழலிலினிய என்றும் பாடம்.

லால் மரங்களினின்றெழும் ஓசை குழலிசைபோ லினிய தாயினும் பாராட்டப் படுவதின்று என்பது போலும். குழலில் என்னும் பாடத்திற்குக் குழல் இல்லாத என்று பொருள் கூறிக்கொள்க. (௩௬)

௩௭. பொருளிலான் வேளாண்மை காமுறுத லின்னா
நெடுமாட நீணகர்க் கைத்தின்மை யின்னா
வருமனை பார்த்திருந் தூணின்னா வின்னா
கெடுமிடங் கைவிடுவார் நட்பு.

(பதவுரை) பொருள் இலான் - செல்வ மில்லாதவன், வேளாண்மை-(பிறர்க்கு) உதவி புரிதலை, காமுறுதல்-விரும்புதல், இன்னா-துன்பமாம்; நெடு மாடம்-நெடிய மாடங்களை யுடைய, நீள்நகர் - பெரிய நகரத்திலே, கைத்து இன்மை-பொருளின்றி யிருத்தல், இன்னா - துன்பமாம்; வருமனை-வரப்பட்ட மனையிலுள்ளாரை, பார்த்திருந்து - எதிர்நோக்கி யிருந்து, ஊண்-உண்ணுதல், இன்னா - துன்பமாம்; கெடும் இடம்-வறுமையுள்ள இடத்தில், கைவிடுவர்-கைவிட்டு நீங்குவாரது, நட்பு-கேண்மை, இன்னா-துன்பமாம் எ - று.

வேளாண்மை-உபகாரம். வருமனை பார்த்திருந்தூண் என்றது பிறர் மனையை அடைந்து அம்மனைக்குரியாரது செவ்வி நோக்கி யிருந்துண்டல் என்றபடி. கெடுமிடங் கைவிடுவார் நட்பு இன்னா வென்பதனை 'கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை யடுங்காலை-யுள்ளினு முள்ளஞ் சுடும்' என்னுந் திருக்குறளானு மறிக. (௩௭)

௩௮. நறிய மலர்பெரிது நாறாமை யின்னா
துறையறியா னீரிழிந்து *போகுத லின்னா
அறியான் வினாப்படுத லின்னா வாங்கின்னா
சிறியார்மேற் செற்றங் கொளல்.

* துறையறியா நீரிழிந்து என்றும் பாடம்.

(பதவுரை) நறிய மலர் - நல்ல மலரானது, பெரிது நாறுமை-மிகவும் மணம் வீசாதிருத்தல், இன்னா-துன்பமாம்; துறை அறியான் - துறையை அறியாதவன், நீர் இழிந்து போகுதல்-நீரில் இறங்கிச்செல்லுதல், இன்னா-துன்பமாம்; அறியான்-(நூற் பொருள்) அறியாதவன், வினப்படுதல்-(அறிவுடையோரால்) வினவப்படுதல், இன்னா - துன்பமாம்; ஆங்கு - அவ்வாறே, சிறியார்மேல்-சிறியவர் மீது, செற்றங் கொளல் - சினங் கொள்ளுதல், இன்னா - துன்பமாம் எ - று.

நறிய - நல்ல, அழகுடைய. துறை - நீரில் இறங்குதற்கும் ஏறுதற்குமுரிய வழி. அறியா நீர் என்பது பாடமாயின் அறியப்படாத நீர் என்க. சிறியார் - வெகுளி செல்லுதற்குரிய எளிமையுடையார்; குழவிப் பருவத்தினருமாம். (ருஅ)

ருகூ. பிறன்மனையாள் பின்னோக்கும் பேதைமை யின்னா
மறமிலா மன்னர் செருப்புகுத லின்னா
வெறும்புறம் வெம்புரவி யேற்றின்னா வின்னா
திறனிலான் செய்யும் வினை.

(பதவுரை) பிறன் மனையாள் பின்நோக்கும் - பிறன் மனைவியைக் காமுற்றுப் பின்றொடரக் கருதும், பேதைமை-அறிவின்மை, இன்னா - துன்பமாம்; மறம் இலா மன்னர் - வீரமில்லாத அரசர், செரு புகுதல் - போர்க்களத்திற் செல்லுதல், இன்னா - துன்பமாம்; வெம்புரவி - விரைந்த செலவினையுடைய குதிரையினது, வெறும் புறம் - கலனையில்லாத முதுகில், ஏற்று - ஏறுதல், இன்னா - துன்பமாம்; திறன் இலான் - செய்யுங் கூறுபாடறியாதவன், செய்யும் வினை - செய்யுங்காரியம், இன்னா - துன்பமாம் எ - று.

புரவியின் புறமென்று மாற்றுக. திறன் - அறிந்தாற்றிச் செய்யும்வகை. (௩௯)

௪0 கொடுக்கும் பொருளில்லான் வள்ளன்மை யின்னா
கடித்தமைந்த பாக்கினுட் கற்படுத லின்னா
கொடுத்து விடாமை கவிக்கின்னா வின்னா
மடுத்துழிப் பாடா விடல்.

(பதவுரை) கொடுக்கும் - கொடுத்தற்குரிய, பொருள் இல்லான் - பொருளில்லாதவனுடைய, வள்ளன்மை - ஈகைத் தன்மை, இன்னா - துன்பமாம்; கடித்து அமைந்த - கடித்தற்கு அமைந்த, பாக்கினுள் - பாக்கில், கல் படுதல் - கல் இருத்தல், இன்னா - துன்பமாம்; கவிக்கு - புலவனுக்கு, கொடுத்து விடாமை - பரிசில் கொடுத்தனுப்பாமை, இன்னா - துன்பமாம்; மடுத்துழி - தடைப்பட்ட விடத்து, பாடா விடல் - பாடாது விடுதல், இன்னா - (பாடும் புலவனுக்குத்) துன்பமாம் எ - று.

கடித்து - கடிக்க என்பதன் திரிபு; பிளந்து எனினுமாம். கல் என்றது பாக்கிற் படுவதொரு குற்றம். மடுத்துழி - பொருள் பெற்ற விடத்தில் எனினுமாம். பாடா - ஈறு கெட்ட எதிர் மறை வினையெச்சம். (௪0)

௪௧. அடக்க முடையவன் மீளிமை யின்னா
துடக்க மிலாதவன் றற்செருக் கின்னா
அடைக்கலம் வவ்வுத லின்னாவாங் கின்னா
அடக்க வடங்காதார் சொல்.

(பதவுரை) அடக்கம் உடையவன் - (ஐம்பொறிகளை) அடக்குதலுடையவனது, மீளிமை - தறுகண்மை, இன்னா-

துன்பமாம் ; துடக்கம் இலாதவன் - முயற்சி யில்லாதவன், தற்செருக்கு - தன்னையே மதிக்கும் மதிப்பு, இன்னா - துன்பமாம் ; அடைக்கலம் - பிறர் அடைக்கலமாக வைத்த பொருளை, வவ்வுதல் - கவர்ந்து கொள்ளுதல், இன்னா - துன்பமாம் ; ஆங்கு - அவ்வாறே, அடக்க -(அறிவுடையோர்) அடக்கவும், அடங்காதார் - அடங்குத லில்லாதவர்க்குக் கூறும், சொல் - சொல்லானது, இன்னா - துன்பமாம் எ - று.

மீளிமை - பெருமிதமுமாம். துடக்கம் - வளைவு ; உடல் வளைந்து வினைசெய்தற் கேற்ற முயற்சியை உணர்த்திற்று ; தொடக்கம் என்று கொண்டு யாதானும் நற்கருமஞ்செய்யத் தொடங்குதல் என்றுரைப்பினுமாம். அடங்காதார் சொல்- அடங்காதார் அவையிற் கூறுஞ்சொல் எனினும் ஆம். (௩௧)

இன்னா நாற்பது

முற்றும்

# அருஞ்சொல் அகராதி

[எண்-செய்யுளெண்]

| | | | |
|---|---|---|---|
| அதர் | ௩௧ | ஒழுகு | ௧ |
| அந்தணர் | ௨ | ஓட்டு | ௯ |
| அவிந்த | ௧௮ | ஓத்து | ௨௨ |
| ஆர் | ௧௬ | ஓம்பல் | ௬ |
| ஆர்த்த | ௩ | ஓம்பா | ௧௮ |
| ஆர்த்தல் | ௧௯ | கண்மாறி | ௫ |
| ஆன்று | ௧௮ | கலிமா | ௨௯ |
| இகலின் | ௯ | கவறு | ௨௬ |
| இடங்கழியாளர் | ௧௨ | காமுறுதல் | ௩௭ |
| இடன் | ௧௨ | கான்யாறு | ௨௩ |
| இடுக்கண்கள் | ௨௬ | கிழமை | ௨௮ |
| இடும்பை | ௭ | குஞ்சரம் | ௧௪ |
| இல்வழி | ௧௧ | குறி | ௩௰ |
| ஈரம் | ௨௧ | கூர் | ௧௧ |
| ஈன்றுளை | ௧௮ | கைத்தின்மை | ௩௭ |
| உரன் | ௧௯ | கொட்பு | ௩௫ |
| உழை | ௨௨ | கோட்டிகொளல் | ௨௯ |
| உள்ளாது | ௧ | சிறை | ௬ |
| உள்ளி | ௧௩ | சுரம் | ௧௩, ௧௯ |
| உறை | ௨௬, ௩௬ | செரு | ௩௮ |
| உறைசேர் | ௬ | செறல் | ௫ |
| ஊர்தல் | ௧௬ | செறிவு | ௩௰ |
| ஊர்வு | ௧௬ | செற்றம் | ௩௮ |
| எண் | ௧௭, ௩௨ | சேர்ந்தொழுகல் | ௬ |
| எழிலி | ௩௬ | ஞாட்பில் | ௭ |
| ஏமம் | ௨௫ | தண்டமாக | ௧௩ |
| ஐம்பால் | ௧௫ | தறி | ௩௰ |
| ஒட்டார் | ௨௬ | தறுகண்மை | ௧௪ |
| ஒலி | ௧௫ | தாள் | ௧ |

திரு ௫
துடக்கம் ௬௧
துணர் ௧௫
துறை ௩௮
தேற்றம் ௮
நயம் ௯
நறிய ௩௮
நனி ௨௩, ௩௬
நார் ௯
நாருமை ௨௰
நீள்நகர் ௩௭
நெடுநீர் ௬
நெறி ௧௧
நோன்று ௧௮
பகல் ௯
படுதல் ௬௰
பண் ௰
பந்தம் ௨
பரிசிலர் ௰
பரிப்பு ௰, ௨௯
பரியார்க்கு ௨௭
பாத்தில் ௩
பாத்துணல் ௨௨
பீடு ௨௮
புகல் ௩, ௧௨, ௧௮, ௨௮
புணர் ௧௫
புணை ௬
புரவி ௰, ௧௯
புரிவு ௧௧
புலாம் ௩௫
புலை ௧௩
புறங்கொடுத்தல் ௫
பெருமிதம் ௧௩, ௨௯
பொருள் ௧௯, ௩௬
போகீரம் ௫
மடிந்தொழுகல் ௭
மடுத்தல் ௬௰
மண் ௩௨
மண்டிலம் ௩௫
மறம் ௪, ௭, ௩௯
மறன் ௧௯
மறை ௯, ௩௰
மாற்றம் ௮
மான்று ௧௮
மீளிமை ௬௧
முழவு ௩௨
முறை ௯
மூரி ௨௧
யாத்த ௧௨, ௨௭
வணர் ௧௫
வண்மை ௰, ௧௧
வவ்வுதல் ௬௧
வளமை ௨௫
வள்ளன்மை ௬௰
வனப்பு ௨, ௰, ௧௭, ௨௮
வாயாவிடின் ௨
விழைவு ௧௩
வேந்து ௧௬
வேழம் ௩௧
வேளாண்மை ௩௭

# இன்னா நாற்பது

# செய்யுள் முதற்குறிப் பகராதி

---

[எண் - பக்கவெண்]


| | |
|---|---|
| அடக்க | ௩௪ |
| அறமனத்தார் | ௭ |
| ஆற்ற | ௮ |
| ஆன்றவிந்த | ௧௯ |
| ஈத்த | ௨௰ |
| உடம்பா | ௧௨ |
| உண்ணாது | ௧௯ |
| ஊனுடையா | ௧௭ |
| எருது | ௯ |
| எழிலி | ௩௧ |
| எமமில் | ௨௨ |
| ஒழுக்க | ௩௰ |
| கல்லாதா | ௨௫ |
| கள்ளில்லா | ௰ |
| கள்ளுண்பான் | ௩௰ |
| குலத்துப் | ௧௮ |
| குறியறியான் | ௨௯ |
| கொடுக்கும் | ௩௪ |
| கொடுங்கோன் | ௫ |
| சிறையில் | ௭ |
| சிறையில்லா | ௨௧ |
| தலைதண்ட | ௧௩ |
| தன்னைத்தான் | ௨௯ |
| நட்டா | ௨௩ |
| நறிய | ௩௨ |
| நெடுமர | ௨௭ |
| பகல்போலு | ௯ |
| பண்ணமையா | ௨௮ |
| பந்தமில் | ௩ |
| பார்ப்பாரிற் | ௪ |
| பிறன்மனையாள் | ௩௩ |
| புல்லார் | ௧௫ |
| பெரியாரோ | ௨௩ |
| பெருமை | ௨௫ |
| பொருளிலான் | ௩௨ |
| பொருளுணர்வா | ௧௧ |
| மணியிலாக் | ௧௩ |
| மாரிநாட் | ௧௯ |
| முக்கட் | ௧ |
| யானையின் | ௨௰ |
| வணரொலி | ௧௪ |


---

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகவெளியீடு—கக.

பதினெண் கீழ்க்கணக்கு

பூதஞ் சேந்தனார்

இயற்றிய

# இனியவை நாற்பது

மூலமும்

(பழைய பொழிப்புரையும்)

சென்னைக் கிறித்தவ கலாசாலைத்

தமிழாசிரியர்

வா. மகாதேவ முதலியாரவர்கள்

எழுதிய

விருத்தியுரையும்

திருநெல்வேலித்

தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்

கழகம் லிமிட்டெட்

---

துந்துபிஞு ஐப்பசிமீ

 [விலை அணு 5.

திருச்சிற்றம்பலம்.

# முகவுரை

---

மதுரைப் பாண்டியர் அமிழ்துறழுந் தமிழ் மொழியை ஆராய்ந்து வளர்ப்பான் இரீஇய சங்கங்கள் தலை, இடை, கடையென மூன்றுமென்ப. அவற்று ளொவ்வொன்றி னின்றும் பற்பல அரிய பெரிய நூல்கள் வெளிப்போந்தன. அவற்றுள், தலைச்சங்க நூலொன்றேனும் இஞ்ஞான்றிலது; இடைச்சங்க நூல்களுள் 'தொல்காப்பியம்' ஒன்றுமே யுளது; கடைச் சங்க நூல்களுட் பலவுள. இப் பலவற்றுள், மேற் கணக்கு நூல்களும், கீழ்க் கணக்கு நூல்களும் அடங்குவ. அவற்றுள், கீழ்க்கணக்கு நூல்கள் பதினெட் டென்ப. அதனை,

> 'நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
> பால்கடுகங் கோவை பழமொழி மாமூல
> மின்னிலைசொல் காஞ்சியுட னேலாதி யென்பவே
> கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு'

என்னும் பாவா னறிந்து கொள்க. இவை கீழ்க் கணக்கு நூலாய தென்னையெனின், ஐந்தடியினேறுத செய்யுட்கள் அறம் பொரு ளின்பங்கட் கிலக்கணங்

கூறும் வழிப் பிறபொருளும் இடை யிடை தாவிச செல்லச் சில வெழுத்தாற் சிலவாக வருதலின்;

‘ அடிநிமிர் பில்லாச் செய்யுட் டொகுதி
யறம்பொரு ளின்ப மடுக்கி யவ்வகைத்
திறம்பட வருவது கீழ்க்கணக் காகும் ’

என்னும் பன்னிருபாட்டியற் சூத்திரத்தானும்,

‘ வனப்பிய ருனே வகுக்குங் காலை
சின்மென் மொழியாற் ருய பனுவலோ
டம்மை தானே யடிநிமிர் பின்றே ’

என்னுந் தொல்காப்பியம் பொருளதிகாரம் செய்யுளியல் - 236 வது சூத்திரத்தானும் அதற்குப் பேராசியரும் நச்சினர்க்கினியரும் வரைந்த வுரையானுந் தெளிக வென்க.

இக் கீழ்க்கணக்கு நூல்களையே **தாயபனுவல்** எனவுங் கூறுப. இவை பதினெட்டனுள்ளும், ‘ நானூற்பது ’ என்பன இனியவை நாற்பது, இன்னு நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது. இவற்றுள் ‘ இனியவை நாற்பது ’ அறம் பொரு ளின்பம் பற்றிச் சிலவாய மெல்லிய மொழிகளான் ஐந்தடியி னேருது நாற்பது வெண்பாக்களி னமைதலின் கீழ்க்கணக்காயினமை காண்க. ‘ இனியவை நாற்பது ’ என்பது ‘ இனிய பொருள்களை யுரைக்கும் நாற்பது வெண்பாக்களை யுடைய நூல் ’ என விரிதலின், அன்மொழித் தொகையாய் நூற்குக் காரணக் குறியாயிற் றென்க (நாற்பது - ஆகுபெயர்). ‘ இனியது நாற்பது ’ ‘ இனிது

நாற்பது' 'இனிய நாற்பது' என்னும் பெயர்களானும் இந்நூல் வழங்குதலுண்டு. இந் நூற்கு ஆசிரியர் மதுரைத் தமிழாசிரியர் மகனார் **பூதஞ் சேந்தனார்** என்பார். 'ஆர்' விகுதிகள் உயர்வுபற்றி வந்தன. 'பூதன்' 'சேந்தன்' என்னும் இருமொழிகள் தொல்காப்பியம் - எழுத்ததிகாரம் புள்ளி மயங்கியல் - 55 வது சூத்திர விதிபற்றிப் 'பூதஞ் சேந்தன்' எனப் புணர்ந்ததென்க. ஆசிரியர் பெயர் 'சேந்தன்' என்பதூஉம், அவர் தந்தையார் இயற்பெயர் 'பூதன்' என்பதூஉம், அவர் சிறப்புப் பெயர் 'மதுரைத் தமிழாசிரியர்' என்பதூஉம் உய்த்துணர்க.

ஆசிரியர் முதற்பாவின் மும்மூர்த்திகளைப் பற்றிக் கூறுதலின், வேத வொழுக்கின ராதல்வேண்டு மென்பரொரு சாரார். சினனை நான் முகனாகவும், திருமாலாகவும், சிவபிரானாகவும் வைத்து வாழ்த்துதல் சைன சம்பிரதாய மாகலின், அவர் சைனரென்பர் மற்றொரு சாரார். இந் நூற்குப் பொழிப்புரை இயற்றினா ரின்னாரெனப் புலப்படவில்லை. திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் விரும்பியவாறு யானும் ஓ ருரை யெழுதினன். அவ் வுரைக்கட் குறையேனுங் குற்றமேனுங் காணப்படின், அறிவுடையுலகம் அவற்றைப் பாராட்டாது கொள்ளுமாறு வேண்டுகின்றனன்.

சென்னை,
6-11-22.

வா. ம.

# பாட்டு முதற்குறிப் பகராதி


| செய்யுள் | பக்கம் | செய்யுள் | பக்கம் |
|---|---|---|---|
| அடைந்தார் | சரு | குழவிதளர் | உஉ |
| அதர் சென்று | கஅ | குழவிபிணி | உ0 |
| அந்தண | கஉ | கொல்லாமை | கூ |
| அவ்வித் | ரு0 | சலவரை | உகூ |
| ஆற்றுந்துணை | கக | சிற்றுணுடை | ருங |
| ஆற்றுனை | ஙசா | தங்கணமர் | கரு |
| இளமையை | ருக | தானங்கொடு | ஙஎ |
| உடையான் | ச | நச்சித்தற் | ஙகூ |
| ஊருங்களமா | சக | நட்டார்க்கு | உகூ |
| ஊர் முனிவ | சகூ | நட்டார் புறங் | உஎ |
| எல்லிப்பொ | சஎ | நன்றிப்பயன் | சக |
| ஒவ்துமாறு | கூ | பத்துக்கொடுத் | ருசா |
| ஐவாயவேட் | ஙச | பிச்சைபுக்காயி | ங |
| ஒற்றினு | சஅ | பிச்சைபுக்குண் | ருச |
| கடமுண்டு | ககூ | பிறன்கை | ங0 |
| கண்மூன்று | க | பிறன்மனை | உங |
| கயவரை | ச0 | மன்றின் முது | உஎ |
| கற்றார்முற் | உரு | மானமழிந்த | உக |
| கற்றறிந்தார் | சரு | யானையுடைய | எ |
| காவோடறக் | ஙஉ | வருவாயறிந்து | ஙக |
| | | வெல்வது | ஙங |

# மேற்கோள் நூல்கள்



அறநெறிச்சாரம்
இராமாயணம்
இன்னா நாற்பது
கந்தபுராணம்
கலித்தொகை
கலித்தொகை உரை நடைச் செய்யுள் (நச்.)
சிந்தாமணி
சிந்தாமணி உரை நடைச் செய்யுள்
சிலப்பதிகாரம்
சோணசைலமாலை
தணிகைப் புராணம்
திரிகடுகம்
திருக்குறள்
திருமந்திரம்
தேரையர் மருத்துவ நூல்
தேவாரம்
தொல்காப்பியம்
தொல்காப்பியம் உரை நடைச் செய்யுள்
நல்வழி
நன்னூல்
நன்னூல் உரை நடைச் செய்யுள்
நன்னெறி
நாலடியார்
நான்மணிக்கடிகை
நிகண்டு
நீதிநெறிவிளக்கம்
நைடதம்
பரிமேலழகர் உரைச் செய்யுள்
பாரதம்
பிரபுலிங்கலீலை
புறநானூறு
பெரியபுராணம்
வாக்குண்டாம்
வெற்றிவேற்கை

உ

திருச்சிற்றம்பலம்

மதுரைத்

தமிழாசிரியர் மகனார்

# பூதஞ் சேந்தனார்

இயற்றிய

# இனியவை நாற்பது

க. கண்மூன் றுடையான்றாள் சேர்தல் கடிதினிதே
தொன்மாண் டுழாய்மாலை யானைத் தொழலினிதே
முந்துறப் பேணி முகநான் குடையானைச்
சென்றமர்ந் தேத்த லினிது.

(பழைய உரை.) கண் மூன்றுடையான் பாதங்களை யடைதல் மிக வினிது; பழைய மாட்சிமையுடைய துழாய் மாலையைப் புனைந்தானைத் தொழ லினிது; எல்லாரினும் பேணி முந்துற முக நான் குடையானைச் சென்றமர்ந் தேத்தல் இனிது என்றவாறு.

(பதவுரை.) கண் மூன்று உடையான் - மூன்று கண்களையுடைய சிவபெருமானது, தாள்-திருவடிகளை, சேர்தல்-

அடைதல், கடிது இனிது - மிக வினிது; தொல் - பழைமை யாகிய, மாண்-மாட்சிமை பெற்ற, துழாய் மாலையானை-திருத் துழாய் மாலையை யணிந்த திருமாலை, தொழல் - கைதொழு தல், இனிது,—; முகம் நான்கு உடையானை - நான்கு முகங் களையுடைய பிரமதேவனை, சென்று - (அவன் திருமுன்) சென்று, அமர்ந்து—மேவியிருந்து, பேணி ஏத்தல் - விரும்பி வாழ்த்தல், முந்துற இனிது - முற்பட வினிது.

கண்மூன்றுவன சோமசூர்யாக்நி. சேர்தல் - இடைவிடாது நினைத்தல்;

‘மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்’ (குறள்—௩.)

என்னும் பாவிற்குப் பரிமேலழகர் கண்ட உரையா னறிந்துணர்க. இனி, ‘தஞ்சமாகக் கொண்டடைதல்’ எனினுமாம். கடிது - ‘கடி’ என்னும் உரிச்சொற் றிரி பென்க. ‘முந்துற’ வென்பது ‘இனிது’ என்னுங் குறிப்பு வினையொடு முடிந்தது. ‘பேணி முந்துற’ வென முடித்து, ‘(அவன்) மற்றெல்லா வுயிரினும் (தன்னை) விரும்பி முன்வர’ எனவும்; ‘முந்துற பேணி’ என முடித்து, ‘(ஏத்து வார்) முன்வர விரும்புகிறவனாகிய’ அல்லது ‘(ஏத்து வாரை) முற்படப் பாதுகாப்பவனாகிய’ (பேணி - ஈண்டுப் பெயர்) எனவும்; ‘முந்து சென்று உற பேணி ஏத்தல்’ என முடித்து, ‘திருமுன் சென்று நன்கு விரும்பி வாழ்த்தல்’ எனவும்; ‘முந்து அமர்ந்து உற பேணி ஏத்தல்’ என முடித்து, ‘திருமுன் இருந்து நன்கு விரும்பி வாழ்த் தல்’ எனவும் பொருள் கோடற் கிடனிருத்த லறிக. ‘சேர்தல், ஏத்தல், தொழல்’ என மனம் வாக்கு காயமென் னும் திரிகரண வழிபாடு கூறினாராத லுணர்க. (க)

உ. பிச்சைபுக் காயினுங் கற்றன் மிகவினிதே [தே
நற்சவையிற் கைக்கொடுத்தல் சாலவு முன்னினி
முத்தேர் முறுவலார் சொல்லினி தாங்கினிதே
தெற்றவு மேலாயார்ச் சேர்வு.

(பழைய உரை.) இரந்துண்டாயினுங் கற்றல் மிக வினிது; கல்விகள் நல்லவை முன்னர்த் தமக்கு வந் துதவுதன் மிக வினிது; முத்தையொக்கும் நகையினை யுடையார் மெல்லிய சொல் இனிது; அதுபோலத் தெளியவும் இனிது மேலாயாரைச் சேர்தல் எ - று.

(பதவுரை.) பிச்சை புக்கு ஆயினும் - பிச்சை யெடுத் துண்டாயினும், கற்றல்-(கற்பனவற்றைக் கசடறக்) கற்றல், மிக இனிது,—; நல்சவையில் - (அங்ஙனங் கற்ற கல்விகள்) நல்ல சபையின்கண், கைக் கொடுத்தல் - (தமக்கு) வந்துதவு தல், சாலவும் - மிகவும், முன் இனிது - முற்பட வினிது; முத்து ஏர் முறுவலார் - முத்தை யொக்கும் பற்களை யுடைய மகளிரது, சொல் - வாய்ச் சொல், இனிது,—; ஆங்கு - அதுபோல, மேலாயார்ச் சேர்வு - பெரியாரைத் துணைக் கொள்ளுதல், தெற்றவும் இனிது - தெளியவு மினிது.

'ஆயினும்' என்புழி உம்மை இழிவு சிறப்பு.

'கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினுங் கற்கை நன்றே'

என்றார் பின்னேரும். சவை - 'சபா' என்னும் வடசொல் 'ஆ' ஈறு 'ஐ' ஆதல் முறைபற்றிச் 'சபை' என்றாகி, பகர வகர வொற்றுமை பற்றிச் 'சவை' என்றாயது.

நற்சவை - சபைக்கு நன்மையாவது நல்லோர் கூடியிருத் தல்; அதனை,

'நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
வெவ்வழி நல்லவ ராடவ
ரவ்வழி நல்லை வாழிய நிலனே' (புறம்—கஅஎ.)

என்பதனு னறிக. கைக் கொடுத்தலாவது கற்றன வெல்லாம் வேண்டுமுன் நினைவிற்கு வந்து நிற்றல்.

'நெடும்பகற் கற்ற வவையத் துதவா
துடைந்துளா ருட்குவருங் கல்வி— கடும்பக
லேதிலான் பாற்கண்ட வில்லினும் பொல்லாதே
தீதென்று நீப்பரி தால்'

என்னும் நீதிநெறிவிளக்கச் செய்யுள் ஈண்டறியத் தக்கது. ஏர் - உவமவுருபு; 'தணிகை வெற்பேரும்' என்றார் பெரியாரும். 'ஏர்' என்பதற்கு 'அழகு' எனப் பொருள் கோடலு மொன்று. மகளிர் சொல் இனிதாதலைத் 'தேன் மொழியார்' என்னும் பெயரானு மறிக. சிலப்பதிகார முடையார்

'பாகுபொதி பவளந் திறந்து
நாகிள முத்தி னகைநலங் காட்டி'

என்றமையும், வடமொழிப்புலவ ரொருவர்

'மது திஷ்டதி வாசி யோஷிதாம்' (பெண்களுடைய வாக்கானது தேனு யிருக்கிறது.)

என்றமையும் அப் பொருளை வற்புறுத்து மென்க. தெற்ற இனிதாதலாவது மிக வினிதாதல். (உ)

௩. உடையான் வழக்கினி தொப்ப முடிந்தான்
மனைவாழ்க்கை முன்னினி தாணு தாமாயி
னிலையாமை நோக்கி நெடியார் துறத்த
றலையாகத் தானினிது நன்கு.

(பழைய உரை.) பொருளுடையானது வண்மை இனிது; மனையாளுள்ளமுங் கொழுநனுள்ளமும் வேறுபடாது பொருந்தின் மனைவாழ்க்கை மிக வினிது; மாட்சிமைப்படாதாயின் நிலையாமையை ஆராய்ந்து நீட்டியாதே துறத்தல் தலைப்பட மிக வினிது எ - று.

(பதவுரை.) உடையான் - பொருளுடையானது, வழக்கு - ஈகை, இனிது—; ஒப்ப முடிந்தால் - மனைவியுள்ளமுங் கணவனுள்ளமும் (மாறுபாடின்றி) ஒன்றுபடக் கூடுமாயின், மனைவாழ்க்கை - இல்வாழ்க்கையானது, முன் இனிது-முற்பட வினிது; மாணாதாம் ஆயின் - (அங்ஙனம்) மாட்சிமைப்படாதெனின், நிலையாமை நோக்கி - (யாக்கை முதலியன) நில்லாமையை ஆராய்ந்து, நெடியார் - தாமதியாதவராய், துறத்தல் - (அகம், புறமாகிய இருவகைப் பற்றுக்களையும்) விடுதல், தலையாக நன்கு இனிது - தலைப்பட மிக வினிது.

ஒப்பமுடிதலின் அருமை தோன்ற 'ஒப்ப முடிந்தால்' என்றார்.

'காதன் மனையாளுங் காதலனு மாறின்றித்
தீதி லொருகருமஞ் செய்பவே - யோதுகலை
யெண்ணிரண்டு மொன்றுமதி யென்முகத்தாய் நோக்
கண்ணிரண்டு மொன்றையே காண்' [கருன்

என நன்னெறியும்,

'மருவிய காதன் மனையாளுந் தானு
மிருவரும் பூண்டுய்ப்பி னல்லா—லொருவரா
னில்வாழ்க்கை யென்னு மியல்புடைய வான்சகடஞ்
செல்லாது தெற்றிற்று நின்று'

என அறநெறிச்சாரமும் கூறுதல் காண்க.

மனைவாழ்க்கை எனைய துறவற வாழ்க்கையைக் காட்டிலும் இனிதாதலை,

'அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று' (குறள்—சக.)

எனத் தெய்வப் புலமைத் திருவள்ளுவனாரும் கூறினர். துறத்தல் (புறமாகிய செல்வத்தின் கண்ணும் அகமாகிய உடம்பின் கண்ணும் உளதாய பற்றினை அவற்றது நிலையாமை நோக்கி) விடுதல். நெடியார் - (செல்லற்குக்காலம்) நீட்டியாதவராய்; இது முற்றெச்சம். இஃது இப்பொருட்டாதலை,

'இல்ல மிளமை யெழில்வனப்பு மீக்கூற்றஞ்
செல்வம் வலியென் றிவையெல்லா—மெல்ல
நிலையாமை கண்டு நெடியார் துறப்பர்
தலையாயார் தாமுய்யக் கொண்டு'

என்னும் நாலடி செய்யுள் வலியுறுத்தும்.

'தலையாகத் துறத்தல்' என முடித்து, 'தலைப்பட்டார் தீரத் துறந்தார்' என்பதற்கொப்பத் '(தாம்) தலைப்படுமாறு துறத்தல்' எனப் பொருளுரைப்பாரு முளர். (ந)

ச. ஏவது மாறா விளங்கிளைமை முன்னினிதே
நாளு நவைபோகான் கற்றல் மிகவினிதே
யேருடையான் வேளாண்மை தானினி தாங்
தேரிற்கோ ணட்புத் திசைக்கு. [கினிதே

(பழைய உரை.) ஏவியது செய்யும் இளங்கிளைமை ஒருவற்கு மிக வினிது; குற்றங்களிற் செல்லாது நாடோறுங் கற்றல் மிக வினிது; ஏருடையான் வேளாண்மை இனிது; அதுபோல இனிது தான் செல்லுந் திசைக்கு ஆராயின் நட்புக்கோடல் எ - று.

(பதவுரை.) ஏவது மாறு - ஏவ்லை மறுது செய்யும், இளங்கிளைமை - மக்களுடைமை, முன் இனிது - முற்படவினிது; நவை போகான் - குற்றங்களிற் செல்லாதவனாய், நாளும் கற்றல் - நாடோறுங் கற்றல், மிக இனிது,—; ஏர் உடையான் - (தனதென) உழுமாடுகளை யுடையானது, வேளாண்மை - பயிர்த்தொழில், இனிது,—; ஆங்கு - அது போல, தேரின் - ஆராயின், திசைக்கு-(தான் செல்லுந்) திசையில்; கோள் நட்பு - நட்புக் கொள்ளுதல், இனிது,—.

ஏவது - 'ஏவ்' முதனிலைத் தொழிற் பெயரும், 'உணர்வதுடையார்' (நாலடி) என்புழிப்போல 'அது' பகுதிப் பொருள் விகுதியுமாம். அன்றி, 'மேவா ரிலாஅக் கடை' (திருக்குறள்) என்புழிப் போல, 'ஏவுவது' என்பது விகாரமாயிற்றென்பது மொன்று. இனி 'ஏவியது' என்னும் வினையாலணைந்த பெயர் 'ஏவது' எனக் குறைந்த தென்பாருமுளர். இளங்கிளையாவார் மக்களென்க; 'கேளாதே வந்து கிளைகளா யிற்றோன்றி' என்னும் நாலடிச்செய்யுள் காண்க. ஏர்-எருது; 'ஏரழ குழுபெற் றப்பேர்' என்னும் கக-வது நிகண்டு. நாளுங் கற்றல் - நாண் முழுதுங் கற்றலுமாம். வேற்றூராகலின் நட்புக் கோடல் நன்றென்பார் 'கோணட்புத் திசைக்கு' என்றார். திசைக்கு - வேற்றுமை மயக்கம். 'தான் செல்லுந், திசைக்குப்பாழ் நட்டாரை யின்மை' என்னும் நான்மணிக்கடிகையும் ஈண்டுக் கருதத்தக்கது. (ச)

ரு. யானை யுடைய படைகாண்டன் முன்னினிதே
யூனைத்தின் றூனைப் பெருக்காமை முன்னினிதே
கான்யாற் றடைகரை யூரினி தாங்கினிதே
மான முடையார் மதிப்பு.

(பழைய உரை.) யானைகளையுடைய சேனையைக் காண்டல் மிக வினிது; பிறிதொன் றூனைத் தின்று தன்

னூனைப் பெருக்காமை மிக வினிது; காட்டியாற்றுக் கரைமருங்கினூர் இனிது; அவைபோல இனிது மான முடையார் நினைப்பு எ - று.

(பதவுரை.) யானையுடைய படை - யானைகளையுடைய சேனையை, காண்டல் - (அரசன்) செய்துகொள்ளுதல், முன் இனிது - முற்பட வினிது; ஊனை தின்று - (பிறிதோருயிரின்) தசையைத் தின்று, ஊனை பெருக்காமை - (தன்) உடம்பை வளர்க்காமை, முன் இனிது,—; கான்யாற்று அடை கரை ஊர் - முல்லை நிலத்து யாற்றினது நீரடை கரைக்கண் உள்ள ஊர், இனிது - (வாழ்தற்) கினிது; ஆங்கு - அவை போல, மானம் உடையார் - மானமுடையவரது, மதிப்பு - கொள்கை, இனிது,—.

‘ கடலெனக் காற்றெனக் கடுங்கட் கூற்றென
வுடல்சின வுருமென ’ (குணமாலையார்—கஉ௩.)

எனவும்,

‘ காற்றெனக் கடலெனக் கருவரை யுருமெனக்
கூற்றென ’ (கனகமாலையார்—உஅக.)

எனவும், சிந்தாமணியுடையார் கூறியபடி விசையாற் காற்றும், ஒலியாற் கடலும், வடிவால் வரையும், அச்சத்தா லுருமும் கொலையாற் கூற்றுமெனத் தக்க யானைகளைப் பெறுதலின் அருமையும் பெற்றவழி யுளதாம் பயனுந் தோன்ற ‘யானை யுடைய படைகாண்டன் முன்னினிதே’ எனவும்,

‘ தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
னெங்ஙன மாளு மருள்! ’ (குறள்—உடுக.)

என்றபடி தன்னூன் வளர்த்தல் கருதிப் பிறிதோருயிரின் தசையைத் தின்பவன் அருளிலனய் அவ்வுலகத்தை இழந்த

லின், 'ஊனைத்தின் றூனைப் பெருக்காமை முன்னினிதே' எனவும்,

'மானயா நோக்கியர் மருங்குல் போல்வதோர்
கானயாற் றடைகரைக் கதிர்கண் போழ்கலாத்
தேனயாம் பூம்பொழிற் றிண்ணை வெண்மணல்'

(கனகமாலையார்—உ௬௬.)

எனச் சிந்தாமணியுடையார் உரைத்தவாறு நுடக்கமும் அழகுமுடைய கான்யாற்று நீரடை கரை பொழில் செறிந்து வெண்மணல் பரந்திருத்தலின் வாழ்தற்கு வசதியுண்மை தோன்றக் 'கான்யாற்றடை கரையூரினிது' எனவும், தம் நிலையிற் றாழாமையுந் தெய்வத்தாற் றாழ்வு வந்துழி உயிர் வாழாமையுமாகிய மானமுடையார் கொள்கை,

'இம்மையு நன்றா மியனெறியுங் கைவிடா
தும்மையு நல்ல பயத்தலாற்—செம்மையி
னானங் கமழுங் கதுப்பினாய் நன்றேகாண்
மான முடையார் மதிப்பு'

என்று நாலடியாரிற் கூறியவண்ணம் இருமையும் பயத்தலின், 'மான முடையார் மதிப்பு இனிதே' எனவுங் கூறினாரென்க.

காண்டல் - செய்தல்; 'நகரங் கண்டான்' என்னும் வழக்குண்மை தெரிக. இனி, 'காண்டல்,' 'பார்த்தல்' என்பாருமுளர்.

பின்னர் நிற்கும் 'ஊன்' கருவியாகு பெயரென்க. (ரு)

௬. கொல்லாமை முன்னினிது கோல்கோடி மாராயஞ்
செய்யாமை முன்னினிது செங்கோல னாகுத
லெய்துந் திறத்தா லினிதென்ப யார்மாட்டும்
பொல்லாங் குரையாமை நன்கு.

(பழைய உரை.) ஒருயிரைக் கொல்லாமை மிக வினிது ; அரசன் கோல்கோடிச் செய்யாமை மிக வினிது; மற்றவன் செங்கோலனாகுதல் மிக வினிது ; யார்மாட்டும் எய்துந் திறத்தாற் பொல்லாங் குரையாமை மிக வினிது எ - று.

(பதவுரை.) கொல்லாமை-(ஒருயிரைக்) கொல்லாமை, முன் இனிது - மிக வினிது; கோல் கோடி-(அரசன்) நடுவு நிலைமை தவறி, மாராயம் செய்யாமை-(தன்கண் வினைசெய் வார்க்குச்) சிறப்புச் செய்யாமை, முன் இனிது-மிக வினிது; செங்கோலன் ஆகுதல் - (அவன்) முறைசெலுத்துவோனா தல், (முன்னினிது) - மிக வினிது ; யார் மாட்டும் - யாவ ரிடத்தும், எய்தும் திறத்தால்-கூடிய மட்டில், பொல்லாங்கு உரையாமை - (பிறர் மீது) குற்றங் கூறாமை, நன்கு இனிது - மிக வினிது, என்ப - என்பர் (மேலோர்.)

கொலை பஞ்சமா பாதகங்களி லொன்றாகலின் 'கொல் லாமை முன்னினிது' என்றார். 'கோல் கோடி மாரா யன் செய்யாமை' என்பது பாடமென்ப. 'ராயன்' என் னும் வடசொற் றிரிபு அக்காலத்து வழங்கக் காணாமை யானும், 'கோடி செய்யாமை' என்னும் முடிபு நேரிதன்மை யானும், கோல் கோடிச் செய்யாமையே செங்கோல னாகுதலாகலிற் புனருக்தம் (கூறியது கூறல்) என் னுங் குற்றம் நேர்தலானும் அது பாடமாகா தென்க. 'மாராயம்' - 'அரசனாற் செய்யுஞ் சிறப்பு' என்பர் நச்சினார்க் கினியர் (பொருளதிகாரம், புறத்—௬௩.). அரசன் தக்க காரணமின்றி விளையாட்டாக வேட்ட மாடி உயிர் களைக் கொல்லுதலும், தன்கண் வினை செய்வார் பல ருள்ளும் ஒருவன்மாட்டு விருப்புற்று நடுவுநிலைமை தவறி அவற் குரித்தாகாத சிறப்புக்களைச் செய்தலும், மற்றொருவன் மாட்டு வெறுப்புற்று அவன் மீது குற்றஞ் சாற்றலும் கூடா

வாம்; இவை யின்றி நீதி செலுத்தல் இனிதென்பது கருத் தென்க. பொல்லாங் குரையாமையைச் சோர்வற மேற் கொள்ளுத லரிதென்பார் 'எய்துந் திறத்தால் என்றார்.' 'கோல் கோடி' என்புழிக் கோலென்றது தராசுக் கோலை யென் றுணர்க. செவ்விய கோலொத்தலின் 'செங்கோல்' ஆயிற்றென்ப. (சு)

எ. ஆற்றுந் துணையா லறஞ்செய்கை முன்னினிதே
பாற்பட்டார் கூறும் பயமொழி மாண்பினிதே
வாய்ப்புடைய ராகி வலவைக ளல்லாரைக்
காப்படையக் கோட லினிது.

(பழைய உரை.) தமக்கியலு மளவினால் அறஞ் செய்கை மிகவு மினிது; நெறிப்பட்டார் சொல்லும் பயனையுடைய சொல்லி னினிமை இனிது; பழுதிலராகி நாணிலிகளல்லாதாரைக் காப்பாகப் பொருந்தக்கோடல் இனிது எ - று.

(பதவுரை.) ஆற்றுந் துணையும் - கூடியமட்டும், அறஞ் செய்கை - தருமஞ் செய்தல், முன் இனிது - மிக வினிது, பால்பட்டார் - நன்னெறிப்பட்டார், கூறும் - சொல்லும், பயம் மொழி - பயனுடைய சொல்லின், மாண்பு - மாட்சி மை, இனிது,—; வாய்ப்பு உடையர் ஆகி - (கல்வி, செல்வம், அதிகாரம், ஆண்மை முதலிய நலம் யாவும்) பொருந்துத லுடையவராய், வலவைகள் அல்லாரை—நாணிலிகளல்லாத வரை, காப்பு அடைய கோடல்—காப்பாகப் பொருந்தக் கொள்ளுதல், இனிது,—.

அறமாவது நல்லன நினைத்தலும், நல்லன சொல்லுதலும், நல்லன செய்தலுமாம். ஆற்றுந்துணையாவது பொரு ளளவிற் கேற்பச் செய்தல்.

'ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல்' (குறள்—கூ.கூ.)

என்றார் பொய்யில் புலவரும். தமது தன்மையை விடாதார் பகைவராயினும், நொதுமலராயினும், நண்பராயினும் பயனுடை மொழிகளையே பகர்தலின் 'பாற்பட்டார் கூறும் பயமொழி' என்றார். கல்வி, செல்வம், அதிகாரம், ஆண்மை முதலிய எல்லா மிருந்தும் ஒருவன்கண் நாணொன் றில்லையாயின் அவன் தன்னை யடைந்தாரைக் கைவிடுவனென்பது 'வாய்ப் புடையராகி வலவைக ளல்லாரைக், காப்படையக் கோட லினிது' என்பதன் கருத் தென்க. (எ)

அ. அந்தண ரோத்துடைமை யாற்ற மிகவினிதே
பந்த முடையான் படையாண்மை முன்னினிதே
தந்தையே யாயினுந் தானடங்கா னாகுமேற்
கொண்டடையா னாக லினிது.

(பழைய உரை.) மறையவர்க்கு ஓத்துடைமை நிரம்ப மிக வினிது; சுற்றமுடையான் படைகொண்டு செய்யும் ஆண்மை மிக வினிது; தந்தையேயாயினும் அவனடங்கானாயின் அவனைக் கொண்டடையானாகல் இனிது எ - று.

(பதவுரை.) அந்தணர்-பிராமணர்க்கு, ஓத்து உடைமை-வேதத்தினை மறவாமை, ஆற்ற மிக இனிது - மிக வினிது; பந்தம் உடையான் - (மனைவி மக்கண் முதலியோர் மாட்டுப்) பற்றுடையவன், படை ஆண்மை - சேனையை ஆளுந் தன்மை, முன் இனிது - முற்பட வினிது; தந்தையே ஆயினும்-(தன்னைப் பெற்ற) தந்தையே யானாலும், தான் அடங்கான் ஆகு மேல் - அவன் (மனமொழிமெய்கள் தீநெறிக்கட் செல்லாது) அடங்கானெனின், கொண்டு அடையான் ஆதல்-

அவன் சொற் கொண்டு அதன்வழி நில்லாதா ஞதல், இனிது,—.

அந்தணர் - அழகிய தண்மையுடையார் அல்லது வேதாந்தத்தை அணவுவார் என்பது சொல்லின்படி பொருள். இதனை,

‘அந்தண்மை பூண்ட வருமறை யந்தத்துச்
சிந்தைசெ யந்தணர்’

என்னுந் திருமூல நாயனூர் திருவாக்கா னறிக. ஓதப்படுத லின், ஒத்தாயிற்று. பார்ப்பார் வேதத்தை மறந்துழி இழிகுலத் தரா மாகலின் மறக்கலாகாதென்னுங் கருத்தாற் சேந்நாப் போதாரும்.

‘மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்’ (குறள்—கங௪.)

என்னும் பாவின்கண் ‘மறப்பினும்’ என்றமை காண்க. உற வினர்மாட்டுப் பற்றுடையானுயின், பழிக் கஞ்சித் தன் சேனை யில் ஒருயிர்க்கும் வீணுக இழவு நேராதபடி பாதுகாப்பானுக லின் ‘பந்தமுடையான் படையாண்மை முன்னினிதே’ என்ருர்.

‘அற்ருரைத் தேறுத லோம்புக மற்றவர்
பற்றிலர் நாணுர் பழி’ (குறள்—ருoசு.)

என்றிருத்தல் காண்க.

இதற்குச் ‘சுற்றமுடையார் படையை ஆளுந் தன்மை மிக வினிது’ எனப் பொருளுரைப்பாரு முளர்.

‘ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்’ (குறள்—அங௪.)

என்றிருத்தலின், தந்தையாயினும் மனமொழிமெய்களி னடங்கானுயின் அவன்பால் உபதேச மொழிகளைக் கேட்டு அவற்றின்வழி யொழுகாமை இனிதென்ருர். இதற்குத்

"தந்தையே யானாலும் அவன் அடங்காதவனானால் அவனை உடன்கொண்டு ஓரிடத்தை அடையாதவனாகுதல் இனிது' என்றுரை பகர்வாருமுளர். ஏல் - 'எனின்' என்பதன் மரூஉ.

(அ)

கூ. ஊருங் கலிமா வுரனுடைமை முன்னினிதே
தார்புனை மன்னர் தமக்குற்ற வெஞ்சமத்துக்
கார்வரை யானைக் கதங்காண்டன் முன்னினிதே
யார்வ முடையவ ராற்றவு நல்லவை
பேதுறார் கேட்ட லினிது.

(பழைய உரை.) தான் நடாத்துகின்ற மிக்க மா வலியுடைமை மிக வினிது; தார் புனையு மன்னர் தமக் குற்ற செருக்களத்துக் கார்வரையைப்போன்ற யானை யினது வெகுளியைக் காண்டல் அவர்க்கு மிக வினிது; எல்லா உயிர்கண்மேலும் மிகவும் அன்புடையார் நல்ல கேள்விகளை மயக்கமுறாது கேட்டல் இனிது எ-று.

(பதவுரை.) ஊரும் கலிமா - (தான் ஏறிச்) செலுத்து கின்ற மிக்க குதிரை, உரனுடைமை - வலியுடையதாயிருத் தல், முன் இனிது - மிக வினிது; தார் புனை மன்னர் தமக்கு - மாலை யணிந்த அரசர்களுக்கு, உற்ற வெஞ்சமத்து- போர் வாய்த்த களத்தில், கார் வரை யானை - கரிய மலை போன்ற யானைகளின், கதம் - வெகுண்டு செய்யும் போரை, காண்டல் - காணுதல், முன் இனிது,—; ஆற்றவும் ஆர்வம் உடையார் - மிகவும் அன்புடையார், நல்லவை - நல்ல கேள்வி களை, பேது உறார் - மயக்கமடையாதவர்களாய், கேட்டல் - கேட்பது, இனிது,—.

அரசன் ஏறிச்செல்லுங் குதிரைக்குப் பசி தாகம் பொறுத் தற்கும் வேண்டியபோது விரைந்தோடுதற்கும் நெடிது

நேரஞ் சாரி செல்லுதற்கும் வலிமை வேண்டுதலின் 'ஊருங் கலிமா வுரனுடைமை முன்னினிதே' என்றார். தார் - அடையாள மாலை; கண்ணியுந் தாரு மெண்ணின ராண்டே' என்னுந் தொல்காப்பியச் சூத்திர வுரை காண்க.

'குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை' (குறள்—எருஅ.)

என்றவாறு யானைப்போர் காண்டற்குத் தக்க கட்சியாத லுணர்க. 'ஆற்றவும் ஆர்வமுடையார் நல்லவை பேதுறார் கேட்டல் இனிது' என்றார் பேரார்வமுடையார்க் கன்றி கேட்ட நற்பொருள்களை உட்கொள்ளுதலும், உள்ளத்தமைத் தலும், பின் சிந்தித்துத் தெளிதலும், தெளிந்தவழி நிற்றலுங் கூடாமையினென்க.

'ஆற்றவும் நல்லவை' என முடிப்பாரு முளர். பேது றார் - ஒரு சொல்லெனினுமாம்.

இது பஃறொடை வெண்பா வென்க. (க)

கO. தங்கணமர்புடையார் தாம்வாழ்தன் முன்னினிதே
யங்கண் விசும்பி னகனிலாக் காண்பினிதே
பங்கமில் செய்கைய ராகிப் பரிந்தியார்க்கு
மன்புடைய ராத லினிது.

(பழைய உரை.) தம்மாட்டுச் சேர்வுடையார் தாஞ் செல்வமுடையாரதன் மிக வினிது; அங்கண் விசும்பின்கண் விரிந்த நிலாக் காண்டல் இனிது; குற்ற மில் செய்கையராகிப் பரிந்து யாவர்க்கும் அன்புடைய ராதல் இனிது எ - று.

(பதவுரை.) தங்கண் - தம்மிடத்தே, அமர்பு உடையார் - சேர்வுடையார், வாழ்தல் - (செல்வமுடையராய் இனிது).

வாழ்தல், முன் இனிது-மிக வினிது ; அம் கண் விசும்பின்-அழகிய இடமகன்ற வானத்தில், அகல் நிலா - விரிந்த நிலாவை, காண்பு - காணுதல், இனிது,—; பங்கம் இல் செய்கையர் ஆகி - குற்றமில்லாத நடையுடையராய், யார்க்கும் பரிந்து - யாவர்க்கும் இரங்கி, அன்புடையர் ஆதல்—அன்புடையராயிருத்தல், இனிது,—.

தம்மை யடுத்து ஒட்டி வாழ்பவர் நன்மைகளைப் பெற்று வாழ்தல் தம் பெருமிதத்திற் கேதுவாகலின், 'தங்க ணமர்புடையார் தாம் வாழ்தல் முன்னினிதே' எனவும், அழகுந் தண்மையு முடைத்தாய் விழிக்கு விருந்து செய்தலின் 'அகனிலாக் காண்பினிதே' எனவும்,

'என்பி லதனை வெயில்போலக் காயுமே
யன்பி லதனை யறம்' (குறள்—எஎ.)

என்றிருத்தலின், 'யார்க்கு மன்புடையராத லினிது' எனவுங் கூறினரென்க.

அமர்வு - விருப்பமுமாம். தாம் - அசை. (கo)

கக. கடமுண்டு வாழாமை காண்ட லினிதே
நிறைமாண்பில் பெண்டிரை நீக்க லினிதே
மனமாண்பி லாதவரை யஞ்சி யகற
லெனைமாண்புந் தானினிது நன்கு.

(பழைய உரை.) தனிசு கொண்டு உண்டு வாழாமை காண்டல் இனிது ; நிறையினுன் மாட்சிமையில்லாத பெண்டிரை நீக்கல் இனிது ; மனத்தின்கண் மாட்சிமை யில்லாதவரை அஞ்சி நீங்குதல் எல்லா மாட்சிமையினும் மிக இனிது எ - று.

(பதவுரை.) கடம் உண்டு - கடன் கொண்டு உண்டு, வாழாமை-வாழாதிருத்தலை, காண்டல்-காணுதல், இனிது,—;

நிறை மாண்பு இல்-கற்பு மாட்சிமையில்லாத, பெண்டிரை - மனைவியரை, நீக்கல் - விலக்கி விடுதல், இனிது,—; மனம் மாண்பு இலாதவரை - மனத்தின்கண் மாட்சிமையில்லாதவரை, அஞ்சி அகறல் - அஞ்சி நீங்குதல், எனை மாண்பும் - எல்லா மாட்சிமையினும், நன்கு இனிது - மிக வினிது.

'உண்கடன் வழிமொழிந் திரக்குங்கான் முகனுந்தாங்
கொண்டது கொடுக்குங்கான் முகனும்வே றுகுதல்
பண்டுமிவ் வுலகத் தியற்கையஃ தின்றும்
புதுவ தன்றே புலனுடை மாந்திர்' (கலி—உஉ.)

எனவும்,

'விடன்கொண்ட மீனைப் போலும் வெந்தழன் [மெழுகைப் போலும்
படன்கொண்ட பாந்தள் வாயிற் பற்றிய தேரை [போலுந்
திடன்கொண்ட ராம பாணஞ் செருக்களத் [துற்ற போது
கடன்கொண்ட நெஞ்சம் போலுங் கலங்கின [னிலங்கை வேந்தன்'

எனவும் இருத்தலின், 'கடமுண்டு வாழாமை காண்டலினிதே' என்றார். 'நிறை மாண்பில் பெண்டிரை நீக்கலினிதே' என்றது கற்பழிந்த மனைவியொடு கலந்து வாழ்தல் இம்மையிற் றலையிறக்கத்தையும் பெருந்துன்பத்தையும் தருதலே யன்றி மறுமையினும் நரகத்தைத் தருதல் பற்றியென்க. அது கூடாதென்பதனை,

'வினையிலென் மகன்றனுடல் வேறுசெய்வித் தோனை
குனிசிலையி னுளையுயிர் கோறல்புரி யேனேன்
மனைவியய லான்மருவல் கண்டுமவள் கையாற்
றினையளவு மோர்பொழுது தின்றவனு மாவேன்'
(பாரதம்).

'கற்பழி மனைவி யோடு கலந்திருப் பவனு மற்றோர்
பொற்புடை மனைவி தன்னைப் புணர்வதற் கெண்ணு [வானுஞ்
சொற்பொரு ளுணர்த்தி னானைத் தொழவுள நாணு [வானும்
விற்பன வலாத விற்று மெய்வளர்த் தழிகு வானும்,'

'ஆவன னுண்மை...,' (பிரபுலிங்கலீலை) என்றிருத்த விற் றெளிக.

மனமாண்பிலாதார் — கெட்ட எண்ண முடையார், துட்டர்கள்; 'துட்டரைக் கண்டாற் றூரநில்' என்னும் பழமொழி காண்க. 'ஏனை மாண்பு' என்புழி இன்னும் உம்மையும் செய்யுள் விகாரத்தாற் றொக்கன. (கக)

கஉ. அதர்சென்று வாழாமை யாற்ற வினிதே
குதர்சென்று கொள்ளாத கூர்மை யினிதே
யுயிர்சென்று தான்படினு முண்ணார்கைத் துண் [ணுப்
பெருமைபோற் பீடுடைய தில்.

(பழைய உரை.) வழிபோய் முயன்று வாழாமை மிக வினிது; யாதானும் ஒருநூற்குப் பொருளைக் கோட்டிக் கொள்ளாத கூர்மை யினிது; பசியான் உயிர் இறந்துபடினும் உண்ணப்படாதார் கையி னுணவை உண்ணாத பெருமைபோலப் பெருமை யுடையதில்லை எ - று.

(பதவுரை.) அதர் சென்று - வழிபோய், வாழாமை - வாழா திருத்தல், ஆற்ற இனிது - மிக வினிது; குதர் சென்று - தப்பு வழியிற் சென்று, கொள்ளாத - (நூற்குப் பொருள்) கொள்ளாத, கூர்மை - மதிநுட்பம், இனிது,—;

உயிர் சென்று படினும் - (பசியான்) உயிர் இறந்து படினும், உண்ணாதார் கைத்து - உண்ணத் தகாதார் கையி லுணவை, உண்ணு - உண்ணாத, பெருமை போல் - பெருமைபோல, பீடு உடையது இல் - பெருமையுடையது (பிறிதொன்று) இல்லை.

அதர் செல்லலாவது.

'பத்தூர்புக் கிரந்துண்டு பலபதிகம் பாடி பாவையரைக்
கிறிபேசிப் படிருடித் திரிவீர்' (தேவாரம்)

என்றபடி ஊரூராய்ச் சென்றிரத்தல். அன்றி, நாடோடியாத லெனினும் வழிபறித்த லெனினுமாம். இவற்றுள் வழிபறித்தல் வேடர்க்குக் குலத்தொழிலாகலின் ஏனையோருள் அத்தொழிலின் முயல்வார் சிற்சிலரையே நோக்கிக் கூறியதாமாகலின் அப் பொருள் சிறவா தென்க. நூற்பொருளை நுனித்தறியாது வலிந்தும் நலிந்துந் தங் கருத்திற் கியைந்தவாறு கொள்வார் பலராகலின் 'குதர் சென்று கொள்ளாத கூர்மை இனிதே' என்றார். உண்ணாரெனப்படுவார் தாழ்ந்த வருணத்தோர்.

'தான்கெடினுந் தக்கார்க்கே டெண்ணற்க தன்னுடம்பி
னூன்கெடினு முண்ணார்கைத் துண்ணற்க'

என்னும் நாலடியினை ஈண்டறிக.

இனி, 'உண்ணீருண் ணீரென் றுபசரியார் தம்மனையி, லுண்ணாமை கோடி யுறும்' என்றிருத்தலின், ஈண்டு 'உண்ணார்' 'அன்போ டுபசரியாதார்' என்பாரு முளர். அன்றியும், 'உண்ணார்' என்றது குரு, தெய்வம், வறிய ராதியரை; அவர் பொருள்கொண்டு உண்ணுதல் பெரும்பாவமாகலின் என்பாரு முண்டு. அவர் 'கைத்து' 'பொருள்' என்பர். தான் - அசை. 'உயிர் சென்று படினும்' என்புழி உடம்பின் தொழில் உயிர்மேலேற்றப்பட்டது; இஃது உபசாரவழக்கு.

கங. குழவி பிணியின்றி வாழ்த லினிதே
கழறு மவையஞ்சான் கல்வி யினிதே
மயரிக ளல்லராய் மாண்புடையார்ச் சேருந்
திருவுந்தீர் வின்றே லினிது.

(பழைய உரை.) குழவிகள் பிணியுறாது வாழ்தல் இனிது ; செவ்விய பொருள் சொல்லினுங் கழறு மவையத்தாரை அஞ்சாது நின்று சொல்லுங் கல்வி இனிது ; மயக்கமுடைய ரல்லாராய் மாட்சிமை யுடையாரை அடையுஞ் செல்வமும் நீங்காதாயின் இனிது எ - று.

(பதவுரை.) குழவி - குழந்தைகள், பிணி இன்றி - நோயில்லாது, வாழ்தல் - வாழ்வது, இனிது,—; கழறும் - (சொல்லுதற்குரிய சபையினை யறிந்து அதற் கேற்பச்) சொல்லுகின்ற, அவை அஞ்சான் - சபைக்கு அஞ்சாதவனுடைய, கல்வி—கல்வியானது, இனிது,—; மயரிகள் அல்லராய் - மயக்க முடையவ ரல்லாய், மாண்பு உடையார் சேரும் - மாட்சிமை யுடையாரை யடையும், திருவும் - செல்வமும், தீர்வு இன்றேல் - நீங்காதாயின், இனிது,—.

பாலக்கிரக தோடம், பட்சிதோட முதலியன அப் பருவத்துண்மையின் 'குழவி பிணியின்றி வாழ்தலினிதே' எனவும்;

'உளரெனினு மில்லாரொ டொப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்' (குறள்—எஉ0.)

என்றிருத்தலின்,

'கழறு மவையஞ்சான் கல்வியினிதே' எனவும்;

'பரீஇ யுயிர்செகுக்கும் பாம்பொடு மின்னா
மரீஇப் பின்னைப் பிரிவு' (நாலடி—உஉ௯.)

என்றிருத்தலின், 'மாண்புடையார்ச் சேருந் திருவுந் தீர் வின்றே யினிது' எனவுங் கூறினா ரென்க. 'திருவும்' என்புழி உம்மை எச்ச வும்மையாம். (கரு)

கசு. மான மழிந்தபின் வாழாமை முன்னினிதே
தான மழியாமைத் தானடங்கி வாழ்வினிதே
யூனமொன் றின்றி யுயர்ந்த பொருளுடைமை
மானிடவர்க் கெல்லா மினிது.

(பழைய உரை.) தனக்கு மான மழிந்தபின் உயிர் வாழாமை இனிது; தானிருந்து வாழும் இருப்புச் சிதையாவகை தானடங்கி வாழ்தல் இனிது; குற்ற மொன்றின்றி மிக்க பொருளுடைமை எல்லா மக்கட்கும் இனிது எ - று.

(பதவுரை.) மானம் அழிந்தபின்—பெருமை கெட்ட பின், வாழாமை - (உயிர்) வாழாமை, முன் இனிது - மிக வினிது; தானம் அழியாமை - (தானிருந்து வாழும்) இருப்புச் சிதையாதபடி, தான் அடங்கி வாழ்வு - தான் அடங்கி வாழ்தல், இனிது,—; ஊனம் ஒன்று இன்றி - குறைவு சிறிது மில்லாது, உயர்ந்த பொருள் உடைமை - மிக்க பொருளுடையராதல், மானிடவர்க்கு எல்லாம்—எல்லா மக்கட்கும், இனிது,—.

மானம் அழிதல் நிலையினின்றுந் தாழ்தல்.

'தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை' (குறள்—கசுச.)

எனவும்,

'மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா
ருயிர்நீப்பர் மானம் வரின்' (குறள்—கசுக.)

எனவும் பிறருங் கூறுதலின் 'மான மழிந்தபின் வாழாமை முன்னினிதே' என்றார். ஒருவன் தானடங்கி வாழானாயின், அவன் குடியிருப்புச் சிதைதல் ஒருதலையெனல் குறித்தன ரென்க. ஊனமொன்றின்றி யுயர்ந்த பொருளாவது கல்வி யாம் ; என்னை?

'கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை' (குறள்—சு00.)

எனவும்,

'தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது' (குறள்—சூஅ.)

எனவும் பெரியாரும் பணித்தமையி னென்க. கலித்தொகை யுடையார் ஒரு காரணம் பற்றிச் செல்வப் பொருளைக் 'கேடில் விழுச்செல்வம்' என்றாரேனும், நச்சினார்க்கினியர் வழுவமைத்தமையுங் கண்டு தெளிக.

'ஒன்று' என்புழி முற்றும்மை விகாரத்தாற் றொக்க தென்க. (கச)

கரு. குழவி தளர்நடை காண்ட லினிதே
யவர்மழலை கேட்ட லமிழ்தி னினிதே
வினையுடையான் வந்தடைந்து வெய்துறும் போழ்து
மனனஞ்சா னாகு லினிது.

(பழைய உரை.) குழவிகள் தளர்நடையைக் காண்டல் இனிது ; அவர் மழலைச் சொல்லைக் கேட்டல் அமிழ்துபோல மிகவும் இனிது ; வினைகிழவன் வந்து சேர்ந்து தான் வெம்மையுறும்பொழுது மனத்தின்கண் அஞ்சாது நிற்றல் இனிது எ - று.

(பதவுரை.) குழவி - குழந்தைகளது, தளர் நடை — தளர்ந்த நடையை, காண்டல் - காணுதல், இனிது—(பெற்றோர்க்கு) இனிது,—; அவர் மழலை - அக் குழந்தைகளது மழலைச் சொற்களை, கேட்டல்,—; அமிழ்தின்-தேவாமிர்தத்தினும், இனிது,—; வினையுடையான்-தீவினை செய்தவன், வந்து அடைந்து - (அதன் பயனாகிய துன்பந்) தன்பால் வந்து சேர்ந்து, வெய்து உறும் போழ்தும் - (தான்) தாபமடையுங் காலத்தும், மனன் அஞ்சான் ஆகல் - மனம் அஞ்சாது நிற்றல், இனிது,—.

தளர் நடையைக் குறுகுறு நடத்தல் என்ப.

‘குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
யிட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்து
நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத்தாம் வாழு நாளே’ (புறம்—கஅஅ.)

என்றார் ஒரு புலவர் புறப்பாட்டினும். ‘அமிழ்தின்’ என்புழிச் சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது, ‘இன்’ உறழ் பொருளின் வந்தது; ஒப்புப் பொருளின் வந்ததெனினுமமையும். தீவினைப்பயன் நுகர்ந்தே தீரவேண்டுதலின், ‘மனனஞ்சா னாக லினிது’ என்றார். ‘வெய்துறும்’ ஒரு சொல்லெனினுமாம். (கரு)

கசு. பிறன்மனை பின்னோக்காப் பீடினி தாற்ற
வறனுழக்கும் பைங்கூழ்க்கு வான்சோர் வினிதே
மறமன்னர் தங்கடையுண் மாமலைபோல் யானை
மதமுழக்கங் கேட்ட லினிது.

(பழைய உரை.) பிறனுடைய மனையாளைப் பின்பு பாராத பெருமை மிகவும் இனிது; நீரின்றி

வருந்தும் பைங்கூழ்க்கு மழை சொரித லினிது; வீரத்தையுடைய மன்னர்தம் வாயிற்கடைப் பெரிய மலைபோன்றிருந்த யானைகளது களிப்பான முழக்கங் கேட்டன் மன்னர்க்கினிது எ - று.

(பதவுரை.) பிறன்மனை - பிறனுடைய மனைவியை, பின் நோக்கா - திரும்பிப் பாராத, பீடு - பெருமை, இனிது,—; வறன் - நீரின்மையால், உழக்கும் - வருத்தும், பைங்கூழ்க்கு-பசிய பயிர்க்கு,வான் சோர்வு-மழை பொழிதல், இனிது,—; மறம் மன்னர் - வீரத்தையுடைய அரசர், கடையுள் - கடைவாயிலின்கண், மாமலைபோல் யானை - பெரிய மலை போலும் யானைகளது, மதம் முழக்கம் - மதத்தாற் செய்யும் பிளிற்றொலியை, கேட்டல்,—, இனிது,—.

'பிறன் மனையாள் பின்னோக்கும் பேதைமை யின்று' என்றார் பிறரும்.

பின் நோக்குதல் - திரும்பிப் பார்த்தவண்ணம் நடத்தல்; இது காதலின் நிகழ்வது என்பதனை,

'எருத்தத் திரண்டு விழிபடை யாமையென் றுருயிரை
வருத்தத் திருத்த முகம்பிறக் கிட்டு மயினடக்குந்
திருத்தத்தைக் கண்டு விளர்த்தவென் றுதய னூர்தி [செங்கோல்
பொருத்தத்த னூர்தியும் பண்டே விளர்த்துப் புகழ் கொண்டவே'

(தணிகைப்புராணம், களவு—அக.)

என்னும் பாவானுமறிக. இனி, மனத்துக் கொள்ளுதல் எனினுமாம். 'பிறன்மனை நோக்காத பேராண்மை' என்பதற்குப் பரிமேலழகர் 'பிறன் மனையாளை உட்கொள்ளாத பெரிய ஆண் தகைமை' என உரை செய்திருத்தல் காண்க. வான் - ஆகுபெயர். (கக)

கள. கற்றார்முற் கல்வி யுரைத்தன் மிகவினிதே
மிக்காரைச் சேர்தன் மிகமாண முன்னினிதே
யெட்டுணை யானு மிரவாது தானீத
லெத்துணையு மாற்ற வினிது.

(பழைய உரை.) கற்றார் முன்பு தங் கல்வியைச் சொல்லி ஏற்றுதல் மிக வினிது; மிக்க அறிவுடையாரைச் சேர்தன் மாட்சிமைப்பட இனிது; எள்ளள வாயினும் இரவாது தான் பிறர்க்கீதல் எல்லாவாற் றானும் இனிது எ - று.

(பதவுரை.) கற்றார் முன் - கற்றவர்க்கு முன்பு, கல்வி உரைத்தல்-தங் கல்வியைச் சொல்லி ஏற்றுதல், மிக இனிது- மிக வினிது; மிக்காரை - (அறிவான்) மேம்பட்டாரை, சேர்தல் - பொருந்தல், மிக மாண - மிக மாட்சிமைப்பட, முன் இனிது - முற்படவினிது; எள் துணை ஆனும் - எள்ளள வாயினும், இரவாது - (தான் பிறரிடம்) யாசியாது, தான் ஈதல் - தான் (பிறர்க்குக்) கொடுத்தல், எ துணையும் - எல்லா விதத்தானும், ஆற்ற இனிது - மிக இனிது.

'கற்றன கல்லார் செவிமாட்டிக் கையுறாஉங்
குற்றந் தமதே பிறிதன்று' (நீதிநெறிவிளக்கம்-உரு.)

என்றிருத்தலின், 'கற்றார் முற் கல்வி யுரைத்தன் மிக வினிதே' எனவும்; 'நல்லினத்தி னூங்குந் துணையில்லை' என்றிருத்தலின், 'மிக்காரைச் சேர்தன் மிகமாண முன் னினிதே' எனவும்;

'எள்ளுவ வென்சில வின்னுயி ரேனுங்
கொள்ளுத ரீது கொடுப்பது நன்றால்' (கம்பர்)

என்றிருத்தலின், 'எட்டுணை யானு மிரவாது தானீதல், எத் துணையு மாற்ற வினிது' எனவுங் கூறினா ரென்க. (கள)

கஅ. நட்டார்க்கு நல்ல செயலினி தெத்துணையு
மொட்டாரை யொட்டிக் கொளலதனின் முன்னி
பற்பல தானியத்த தாகிப் பலருடையு [னிதே
மெய்த்துணையுஞ் சேர வினிது.

பழைய வுரை காணப்பட வில்லை.

(பதவுரை) நட்டார்க்கு - (தன்கண்) நட்புடையார்க்கு, நல்ல செயல் - இனியவற்றைச் செய்தல், இனிது,—; எ துணையும் ஒட்டாரை - எவ்வளவும் (தன் பகைவரோடு) சேராதவரை, ஒட்டிக் கொளல் - நட்பாக்கிக்கொள்ளுதல், அதனின்,—, முன் இனிது - மிக வினிது; பற்பல தானியத்தது ஆகி - பற்பல வகை உணவுப் பொருள்களுடையதாய், பலர் உடையும் - (புறத்தார்) பலர் தோற்றற் கேதுவாகிய, மெய் துணையும் - மெய்க்காப்பு வீரரொடும், சேரல் - (அரண்) பொருந்தல், இனிது,—.

‘நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
யொட்டாரை யொட்டிக் கொளல்’ (குறள்—கூஎக.)

‘கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார்
நிலைக்கெளிதா நீர தரண்’ (குறள்—எசரு.)

‘எல்லாப் பொருளு முடைத்தா யிடத்துதவு
நல்லா ளுடைய தரண்’ (குறள்—எசகூ.)

என்பவற்றின் பொருளிப் பாவின்கண் அமைந்து கிடத்தலறிக. ‘ஒட்டாரை யொட்டிக்கொளல்’ என்பதற்குத் ‘தன் பகைவர் பிறரொடு கூடாமல் மாற்றிவைத்தல்’ எனினுமாம். ‘அதனின்’ ஐந்தனுருபு ஈண்டு உறழ் பொருளின் வந்ததென்க. உடையும் - காரியத்தின்கண் வந்த பெயரெச்சமாதல் காண்க. (கஅ)

கக. மன்றின் முதுமக்கள் வாழும் பதியினிதே
தந்திரத்தின் வாழுந் தவசிகண் மாண்பினிதே
யெஞ்சா விழுச்சீ ரிருமுது மக்களைக்
கண்டெழுதல் காலை யினிது.

(பழைய உரை.) அம்பலத்தின்கண் அறிவுடையார் வாழும் பதி இனிது; தத்தம் நூல்களிற் சொன்ன நெறியானே வாழும் அருந்தவரது மாட்சி யினிது; குறையாத விழுமிய சீரையுடைய இருமுது மக்களைக் காலையின்கட் டொழு தெழுதல் இனிது எ - று.

(பதவுரை) மன்றின் - அம்பலத்தின்கண், முதுமக்கள் - அறிவுடையோர், வாழும் பதி - வாழ்கின்ற ஊர், இனிது,—; தந்திரத்தின் - நூல் விதிப்படி, வாழும் தவசிகள் - வாழ்கின்ற தவத்தோரது, மாண்பு - மாட்சிமை, இனிது,—; எஞ்சா - குறையாத, விழுச்சீர் - மிக்க சிறப்பினையுடைய, இருமுதுமக்களை - தாய்தந்தையரை, காலை - காலையில், கண்டு (அவர் இருக்குமிடஞ் சென்று) கண்டு, எழுதல் - (அவர் பாதங்களின் வீழ்ந்து) எழுதல், இனிது,—

மன்றமாவது ஊர் மன்றம்; அஃதாவது சபைகூடும் பொது விடம். மன்றத்து அறிவுடையார் வாழின், நீதி பெறப்படுதலின், 'மன்றின் முதுமக்கள் வாழும் பதி யினிதே' என்றார். தந்திரம் - நூல், அஃதிலக்கணையால் நூல்விதிக் காயிற்று. 'கண்டொழுதல்' என்பது பாடமாயின், 'அவரிருக்கு மிடத்திற் றொழுதல்' என் றுரை செய்க.

உ0. நட்டார்ப் புறங்கூறான் வாழ்த லினியினிதே [தே
பட்டாங்கு பேணிப் பணிந்தொழுகன் முன்னினி
முட்டில் பெரும்பொரு ளாக்கியக்கான் மற்றது
தக்குழி யீத லினிது.

(பழைய உரை.) உற்றாரைப் பழிகூறாது வாழ்தல் மிக வினிது ; உண்மையாய நெறியினை விரும்பி யாவரையும் பணிந்தொழுகுதல் மிக வினிது ; குறையிலாத பெரும் பொருள்களைத் தேடியவிடத்து அப்பொருளைத் தகுதியுடையார்க்குக் கொடுத்தல் இனிது எ - று.

(பதவுரை.) நட்டார்-(தன்னிடம்)நட்புக்கொண்டாரை, புறங்கூறான் - புறங்கூறாதவனாய், வாழ்தல் - வாழ்வது, நனி இனிது - மிக வினிது; பட்டாங்கு - சத்தியத்தை, பேணி - பாதுகாத்து,பணிந்து ஒழுகல்— (யாவர்க்கும்,) அடங்கி நடத்தல், முன் இனிது-முற்பட வினிது ; முட்டு இல்-குறையில்லாத, பெரும் பொருள் - பெரும் பொருளை, ஆக்கியக்கால் - தேடினால், அது-அப் பொருளை, தக்க உழி - தக்க பாத்திரத்தில், ஈதல்-கொடுத்தல், இனிது,—.

புறங்கூறலாவது காணாதவிடத்துப் பிறரை இகழ்ந்துரைத்தல்; 'தீய, புறங்கூற்றின் மூங்கையாய் நிற்பனேல் யாதும், அறங் கூற வேண்டா வவற்கு' என்றார் நாலடியாரினும். 'பொய்யா விளக்கே விளக்கு' ஆகலின் 'பட்டாங்கு பேணி' எனவும், 'எல்லார்க்கு நன்றாம் பணிதல்' ஆகலின் 'பணிந்தெழுதல்' எனவும்,

'உறக்குந் துணையதோ ராலம்வித் தீண்டி
யிறப்ப நிழற்பயந் தாஅங் - கறப்பயனுந்
தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும்' (நாலடி—௩அ.)

ஆகலின் 'தக்குழி யீதல்' எனவுங் கூறினார்.

புறங்கூறான் - முற்றெச்சம். மற்று - அசை.
'தக்குழி' என்புழி அகரந் தொக்கது. (௨௦)

உக. சலவரைச் சாரா விடுத லினிதே
புலவர்தம் வாய்மொழி போற்ற லினிதே
மலர்தலை ஞாலத்து மன்னுயிர்க் கெல்லாந்
தகுதியால் வாழ்த லினிது.

(பழைய உரை.) வஞ்சகரை அடையாதொழுகு தல் இனிது; அறிவுடையார் வாய்மொழியைப் போற்றிக்கோடல் இனிது; அகன்ற இடத்தை யுடைய ஞாலத்து வாழுமுயிர்க்கெல்லாம் தகுதிப்பட ஒழுகுதல் இனிது எ - று. சலவர்—வஞ்சகர்.

(பதவுரை.) சலவரை - வஞ்சகரை, சாராவிடுதல்- அடையாது நீங்குதல், இனிது,—; புலவர் தம் - அறிவுடையாருடைய, வாய்மொழி-வாய்ச்சொற்களை, போற்றல்— பாதுகாத்துக்கோடல், இனிது,-; மலர்தலை-அகன்ற இடத்தை யுடைய, ஞாலத்து - பூமியில் வாழ்கின்ற, மன் உயிர்க்கு எல்லாம் - நிலைபெற்ற எல்லா வுயிர்க்கும், தகுதியால் - உரிமைப்பட, வாழ்தல் - வாழ்வது, இனிது,—.

சலம் - மாறுபாடு. 'தீயினத்தி, னல்லற் படுப்பதூஉ மில்' என்றார் பிறரும்.

புலம் - அறிவு. 'வாய்மொழி' என்றது தீயசொற்பயிலா வென்ற சிறப்புத் தெரித்தற் கென்க.

'நல்லார்சொற் கேட்ப துவுநன்றே' என்றார் பிறரும்.

மன்னுயிர்க்கெல்லாம் உரிமைப்பட வாழ்தலாவது மன்னுயிரெல்லாந் தன்னுயிரெனக் கொண்டு ஒழுகு தல்.

'உலகு பசிப்பப் பசிக்கு முலகு
துயர்தீரத் தீரு நிலவு
நிறுத்திவாழ் வஞ்சி யுடையாழ்வி யென்னு
மொருத்தியா லுண்டிவ் வுலகு'

என்றிருத்தல் காண்க. (உக)

உஉ. பிறன்கைப் பொருள்வெளவான் வாழ்த லினிதே
யறம்புரிந் தல்லவை நீக்க லினிதே
மறந்தேயு மாணா மயரிகட் சேராத்
திறந்தெரிந்து வாழ்த லினிது.

(பழைய உரை.) பிறன்கைப் பொருள் வெளவாது வாழ்தல் இனிது; அறத்தைச் செய்து பாவங்களை நீக்குதல் இனிது; மறந்தாயினும் மாட்சிமைப் படாத அறிவில்லாரைச் சேராத் திறங்களைத் தெரிந்து வாழ்தல் இனிது எ - று.

(பதவுரை.) பிறன் - பிறனுடைய, கை பொருளை - கைப் பொருளை, வெளவான் - அபகரியாதவனாய், வாழ்தல் - வாழ்வது, இனிது,—; அறம் புரிந்து - அறத்தைச் செய்து, அல்லவை நீக்கல் - பாவங்களைச் செய்யாமை, இனிது,—; மறந்தேயும் - மறந்தாயினும், மாணா - மாட்சிமைப்படாத, மயரிகள் - அறிவிலிகளை, சேரா திறம் - சேராத வழிகளை, தெரிந்து வாழ்தல் - ஆராய்ந்து அறிந்து வாழ்வது, இனிது,—.

'கைப்பொருள் கொடுத்துங் கற்றல்' என்புழிக் கைப் பொருளாவது சேமநிதியென்பர் நச்சினார்க்கினியர். 'பிறர் பொருளெட்டியே யெனவும்' என்றார் பிறரும்.

'அல்லவை நீக்கல்' என்றார், 'அல்லவை செய்தார்க் கறங் கூற்றம்' ஆகலின்.

மேல் 'சலவரைச் சாரா விடுதலினிது' என்றார் இதனுள், 'மறந்தேயு மாண மயரிகட் சேராத், திறந்தெரிந்து வாழ்த லினிது' என்றதென்னை யெனின்; சலவரென்பார் பிறரை மயக்குவாரும், மயரிகளென்பார் தாம் மயங்குவாருமாகலானும், மயக்குவாரைச் சேர்தலின் மயங்குவாரைச் சேர்தல் பேரிடர் விளைத்தலானு மென்க. (உஉ)

உ௩. வருவா யறிந்து வழங்க லினிதே
யொருவர்பங் காகாத வூக்க மினிதே
பெருவகைத் தாயினும் பெட்டவை செய்யார்
திரிபின்றி வாழ்த லினிது.

(பழைய உரை.) தனக்குப் பொருள் வருவாயை அறிந்து கொடுத்தல் இனிது; ஒருவர்க்குச் சார்வாகாத ஊக்கம் இனிது; பெரிய பயனையுடைத்தாயினும் தாம் நினைந்தவற்றை ஆராயாது செய்யாது இயற்கையான் வாழ்தல் இனிது எ - று.

(பதவுரை.) வருவாய் :- (தமக்குப்) பொருள் வருகின்ற நெறியி னளவினை, அறிந்து,—, வழங்கல் - கொடுத்தல், இனிது,—; ஒருவர் பங்கு ஆகாத - ஒருவர்க்குச் சார்பாகாத, ஊக்கம் - மனவெழுச்சி, இனிது,—; பெருவகைத்து ஆயினும் - பெரிய பயனையுடைத்தாயினும், பெட்டவை - தாம் விரும்பியவற்றை, செய்யார் - ஆராயாது செய்யாதவராய், திரிபின்றி - தம்மியல்பின் வேறுபடுதலில்லாது, வாழ்தல் - வாழ்வது, இனிது,—.

வருவாய் - ஆகுபெயர். பிறரும், 'ஆற்றினளவிறந் தீக' எனவும், 'வருவாயுட் கால்வழங்கி வாழ்தல்' எனவும், 'வந்த

பொருளின் காற்கூறு வருமே லிடர்நீக் குதற்கமைத்து, மைந்த விருகா னினக்காக்கி மற்றைக் காலே வழங்கிடுக' எனவுங் கூறினர். தொடர் புடையார்க்குச் சார்பாக மனஞ் செல்லுதல் இயல்பாகலின் 'ஒருவர் பங்காகாத வூக்க மினிதே' என்றூர். 'தொழிற் பயன் பெரிதாயினும் அதனை நோக்காது' தம் மனத்தின்கட்டோன்றும் விருப்பினையடக்கித் தம்மியல்பின் நிற்றல் வேண்டுமென்பார், 'பெட்டவை செய்யார், திரி பின்றி வாழ்த லினிது' என்றூர். தம் இயல்பாவது தமக்கும் பிறர்க்கும் நல்லன செய்தல். (உச)

உரு. காவோ டறக்குளந் தொட்டன் மிகவினிதே
யாவோடு பொன்னீத லந்தணர்க்கு முன்னினிதே
பாவமு மஞ்சாராய்ப் பற்றுந் தொழின்மொழிச்
சூதரைச் சோர்த லினிது.

(பழைய உரை.) காவினையும் ஆக்கிக் குளத்தினையுந் தொட்டல் மிகவும் இனிது; ஆவும் பொன்னும் அந்தணர்க் கீதன் மிகவும் இனிது; பாவத்தையு மஞ்சாது பொருண்மேற் பற்றுந் தொழிலையும் மொழியையு முடைய சூதரை நீக்கல் இனிது எ - று.

(பதவுரை.) காவோடு - சோலை வளர்த்தலோடு, அறக்குளம் - தருமத்திற்குக் குளத்தை, தொட்டல் - வெட்டுதல், மிக இனிது,—; அந்தணர்க்கு - மறையவர்க்கு, ஆவோடு - பசுவோடு, பென் ஈதல்—பென்னைக் கொடுத்தல், முன் இனிது - மிகவினிது; பாவமும் அஞ்சாராய் - (இம்மையிற் பழிக்கேயன்றி மறுமையிற்) பாவத்திற்கும் அஞ்சாதவராய், பற்றும்-(அப் பாவத்தைப்) பற்றுகின்ற, தொழில் - தொழிலையும், மொழி - சொல்லையுமுடைய, சூதரை - சூதாடிகளை, சோர்தல் - நீக்கல், இனிது,—.

'காவோ டறக்குளந் தொட்டானு நாவினுல்
வேதங் கரைகண்ட பார்ப்பானுந்—தீதிகந்
தொல்வதுபாத் துண்ணு மொருவனு மிம்மூவர்
செல்வ ரெனப்படு வார்'

(திரிகடுகம்-எ0.)

'காவளர்த்துங் குளத்தொட்டுங் கடப்பாடு வழுவாமன்[து
மேவினர்க்கு வேண்டுவன மகிழ்ந்தளித்தும் விருந்தளித்
நாவலர்க்கு வளம்பெருக நல்கியுநா னிலத்துள்ளோர்
யாவருக்குந் தவிராத வீகைவினைத் துறைநின்றார்'

(பெரியபுராணம், திருநாவுக்கரசு-ரு சு.)

எனவும் ஆன்றோர் பிறருங் கூறினர்.

ஆவோடு பொன்னீதல் - கோதாந ஸுவர்ந தாநங்கள். பற்றுந் தொழின் மொழியாவன பொய்த்தொழிலும் பொய்ம் மொழியுமாம். 'பழிபாவங்கட் கஞ்சாத சூதரொடு சேரற்க' வென்பது கருத்தென்றுணர்க.

'ஐயநீ யாடுதற் கமைந்த சூதுமற்
றெய்துநல் குரவினுக் கியைந்த தூதுவெம்
பொய்யினுக் கருந்துணை புன்மைக் கீன்றதாய்
மெய்யினுக் குறுபகை யென்பர் மேலையோர்'

(நைடதம்-கசுO.)

என்றிருத்தல் காண்க.

உரு. வெல்வது வேண்டி வெகுளாதா னோன்பினிதே
யொல்லுந் துணையுமொன் றுய்ப்பான் பொறை
யில்லது காமுற் றிரங்கி யிடர்ப்படார் [யினிதே
செய்வது செய்த லினிது.

(பழைய உரை.) தான்வெல்வதனை வேண்டிப் பிறரோடு வெகுளாதான் பொறை இனிது; தனக்

கியலுமளவு மேற்கொண்டதொன்றை நடாத்துவா னாற் றல் இனிது ; தனக்கில்லை யதனைக் காதலித்து இரங்கி யிடர்ப்படாது இயல்வதனைச் செய்தல் இனிது எ - று.

(பதவுரை.) வெல்வது - மேம்படுதலை, வேண்டி - விரும்பி, வெகுளாதான் - கோபியாதவனது, நோன்பு - தவம், இனிது,—; ஒல்லும் துணையும் - கூடிய வளவும், ஒன்று உய்ப்பான் - எடுத்துக்கொண்டதொரு கருமத்தை நடத்து வோனது, பொறை - ஆற்றல், இனிது,—; இல்லது - (தம் மிடத்து) இல்லாததொரு பொருளை, காமுற்று - விரும்பி, இரங்கி - (அது பெறாமையின்) மனம் ஏங்கி, இடர்ப்படார் - துன்பப்படாதவராய், செய்வது - (உள்ளது கொண்டு) செய் யத்தக்கதொரு கருமத்தை, செய்தல் - செய்வது, இனிது,—.

மேம்படுதலாவது மேற்கொண்ட தவத்தை இடையூறு புகாது காத்து இனிது முடித்தல். 'வெல்வது, வேண்டின் வெகுளி விடல்' என்றார் பிறரும்.

ஆற்றலாவது இடுக்கண் முதலியவற்றாற் றளராமை.

'பெற்ற சிறுகப் பெறாத பெரிதுள்ளுஞ்
சிற்றுயிர்க் காக்க மரிதம்மா' (நீதிநெறிவிளக்கம்-௯௪.)

என்றபடி பெறாதவற்றைக் காமுறுதல் உயிர்க்கியல்பாகலின், 'இல்லது காமுற்றிரங்கி யிடர்ப்பார்' என்றார். இல்லது - வினையாலணைந்த பெயர்.

௨௯. ஐவாய வேட்கை யவாவடக்கன் முன்னினிதே
கைவாய்ப் பொருள் பெறினுங் கல்லார்கட் டீர்
நில்லாத காட்சி நிறையின் மனிதரைப் [வினிதே
புல்லா விடுத லினிது.

(பழைய உரை.) ஐம்பொறியுடைய வேட்கையையும் அவாவினையும் அடக்கல் மிக வினிது; தன் கையின்கண்ணே பொருள்பெறினும் கல்லாதாரை விடுத லினிது; நிலையில்லாத அறிவையுடைய திண்மையில்லாத மக்களை மேவாது விடுதல் இனிது எ - று.

(பதவுரை.) ஐவாய வேட்கை - ஐந்து வழியான் வருகின்ற ஆசையையும், அவா - (அதனை ஒருகால் விடினும்) பழைய பயிற்சி வயத்தான் அதன்கட் செல்லும்) நினைவையும், அடக்கல் - ஒழித்தல், இனிது,—; கைவாய் பொருள் - கையினிடத்து நிற்கக்கூடிய பொருளை, பெறினும் - பெறுவதாயிருப்பினும், கல்லார் கண் - கல்லாதவரை, தீர்வு - விடுதல், இனிது,—; நில்லாத காட்சி - நிலையில்லாத அறிவினையுடைய, நிறையில் - (நெஞ்சை) நிறுத்துதலில்லாத, மனிதரை,—, புல்லா விடுதல் - சேராது நீங்குதல், இனிது,—.

ஐந்து வழியாவன மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன.

‘மெய்வாய்கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற
ஐவாய வேட்கை யவாவினைக்—கைவாய்க்
கலங்காமற் காத்துய்க்கு மாற்ற லுடையான்
விலங்காது வீடு பெறும்’ (நாலடி-ருக.)

என்பது காண்க.

கைவாய்ப் பொருளென்றது சேமநிதியை; உஉ-வது பாட்டின் குறிப்புரை காண்க.

‘விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்’ (குறள்-சகo.)

என்றிருத்தலின், ‘கல்லார்கட் டீர்வினிதே’ என்றார்.

கற்றுவைத்தும் அறிவு மயங்குதலும் மனஞ் சென்ற வழியெல்லாஞ் செல்லுதலுமாகிய தீயொழுக்க முடையார் சேர்க்கை கேடு பயத்தலின், 'நில்லாத காட்சி நிறையின் மனிதரைப், புல்லா விடுத லினிது' என்றார். நிறையாவது (நெஞ்சினை) நிறுத்தல், 'நிறையெனப் படுவது மறை பிற ரறியாமை' எனக் கலித்தொகை கூறுதலு மறிக.

புல்லா - வினையெச்ச வீறு புணர்ந்து கெட்டதென்க.

உஎ. நச்சித்தற் சென்றார் நசைகொல்லா மாண்பினிதே
யுட்கில் வழிவாழா வூக்க மிகவினிதே
யெத்திறத் தானு மியைவ கரவாத
பற்றினிற் பாங்கினிய தில்.

(பழைய உரை) தன்னை நச்சிச்சென்றார் நசையைச் சிதையாத மாண்பினிது; தன்னை மதிப்பில்லாத விடத்து வாழாத வுள்ளம் மிக வினிது ; எப்பெற்றியாயினும் பிறர்க்குக் கொடுக்கப் பொருந்துவதனைக் கரவாத மனைவாழ்வு போல நன்றாக வினியது பிறிதில்லை எ - று.

(பதவுரை.) நச்சி - (ஒரு பொருளைப் பெற) விரும்பி, தன் சென்றார் - தன்னை அடைந்தவரது, நசை - விருப்பம், கொல்லா - அழுங்குவியாத, மாண்பு - மாட்சிமை, இனிது,—; உட்கு - மதிப்பு, இல்வழி - இல்லாத விடத்து, வாழா - வாழாமைக்கேதுவாகிய, ஊக்கம் - மனவெழுச்சி, மிக இனிது,—; எ திறத்தானும் - எப்படியாயினும், இயைவ - (பிறர்க்குக்) கொடுக்கக்கூடியவற்றை, கரவாத - ஒளிக்காத, பற்றினின் - அன்பினும், பாங்கு இனியது இல் - நன்றாக வினியது வேறொன்றில்லை.

'தன் நச்சி' எனக் கூட்டுவாருமுளர். 'செல்லுதல்' ஈண்டு அடைதல். நசை கொல்லலாவது ஒன்றைப் பெறலா மென்ற ஆசை நாளடைவிற் றேய்ந்து அழியுமாறு செய்தல்; அஃதாவது கொடுத்தற் கிசைவில்லையாயின் உடனே மறுத்து பன்முறையும் தருவதாகப் பொய்கூறி நாளடைவில் அவ் வாசை தானே அழியுமாறு செய்தல். அஃ தப்பொருட்டா தலை,

'இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும்
வசையன்று வையத் தியற்கை - நசையழுங்க
நின்றோடிப் பொய்த்த னிரைதொடீஇ செய்நன்றி
கொன்றாரிற் குற்ற முடைத்து' (நாலடி-௧௧௧.)

என்னும் பாவா னறிக.

உட்கு - உள்குதல், நினைத்தல்; ஈண்டு மதித்தல்.

'இம்மி யரிசித் துணையானும் வைகலு
நும்மி லியைவ கொடுத்துண்மின்' (நாலடி-௯௪.)

என்றிருத்தலின் 'எத்திறத்தானு மியைவ கரவாத' என்றார். பற்று இல்வாழ்க்கையுமாம்.

௨௮. தானங் கொடுப்பான் றகையாண்மை முன்னினி
மானம் படவரின் வாழாமை முன்னினிதே [தே
யூனங்கொண் டாடா ருறுதி யுடையவை
கோண்முறையாற் கோட லினிது.

(பழைய உரை.) தானஞ் செய்வானது தகுதி யது தலைமை இனிது; மானங் கெட வந்ததாயின் உயிர் வாழாமை மிக வினிது; குற்றங்கொண்டாடாது நன்மையுடையனவற்றை மனத்திற் கொள்ளு முறை மையாற் கோடல் இனிது எ - று.

(பதவுரை.) தானம் கொடுப்பான் - (அபயமென் பார்க்கு) இடங் கொடுப்பானது, தகை ஆண்மை - பெருமை பொருந்திய வீரம், முன் இனிது - மிக வினிது; படமானம் வரின் - தான் இறப்ப மானம் எய்து மெல்லவரின், வாழாமை - உயிர் வாழாமை, முன் இனிது,—; ஊனம் கொண்டாடார் - குற்றம் பாராட்டாதவராய், உறுதி உடையவை - நன்மையுடையனவற்றை, கோள் முறையால் - கொள்ளுமுறைமைப்படி, கோடல் - கொள்ளுதல், இனிது,—.

தானம் கொடுப்பான் அபயப்ரதாநஞ்செய்து தன் பக்கல் இடந்தந்து பாதுகாப்பவன். 'மாவீரனல்லனுயின் அது செய்யத் துணியான்' என்பது குறிப்பு. 'தானங் கொடுப்பான் தகையாண்மை' என்பதற்கு அன்ன முதலிய தானங்களைச் செய்வானது தகுதியின் றலைமை என்பர் பழைய வுரைகாரர். மானம் இன்னதென கசு-வது பாட்டுரைக்கண் உரைத்தாம். 'மானம் வரின்' என்பதற்குப் பரிமேலழக ருரை கண்டு தெளிக. 'நீரை நீக்கிப் பாலையுண்ணும் அன்னப்பறவை போலக் குற்ற முடையன நீக்கிக் குணமுடையன கொள்க' என்பார்,'ஊனங் கொண்டாடாருறுதியுடையவை' எனவும்; காரண காரியம்,ஜநக ஜந்யம் முதலிய சம்பந்தங்களுள் யாதானு மொன்றுபற்றி இது கேட்டபின் இது கேட்கத்தக்கதென ஆன்றோர் கொள்ளு முறைப்படி கொள்க என்பார் 'கோண் முறையால்' எனவுங் கூறினர்.

இனி, கோள் முறையாவது கோடன் மரபென்பாருமுளர். அஃதின்னதென,

'கோடன் மரபே கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடன் முனியான்
குணத்தொடு பழகி யவன்குறிப் பிற்சார்ந்
திருவென விருந்து சொல்லெனச் சொல்லி

பருகுவ னன்ன வார்வத்த னாகிச்
சித்திரப் பாவையி னத்தக வடங்கிச்
செவிவா யாக நெஞ்சுகள னாகக்
கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்துப்
போவெனப் போத லென்மனார் புலவர்' (நன்னூல்)

என்னுஞ் சூத்திரத்தா னறிந்து கொள்க.

உகூ. ஆற்றானை யாற்றென் றலையாமை முன்னினிதே
கூற்றம் வரவுண்மை சிந்தித்து வாழ்வினிதே
யாக்க மழியினு மல்லவை கூறாத
தேர்ச்சியிற் றேர்வினிய தில்.

(பழைய உரை.) ஒன்றனைச் செய்யமாட்டா தானைச் செய்யென் றலையாமை மிகவு மினிது; கூற்றத்தின் வரவுண்டென்று நினைத்து வாழ்தல் இனிது; செல்வ மழியினும் பாவமானவை கூறாத ஆராய்ச்சி போல ஆராய்தன் மிக வினியதில்லை எ - று.

(பதவுரை.) ஆற்றானை - (ஒரு தொழிலைச்) செய்ய மாட்டாதானை, ஆற்று என்று-(அதனைச்) செய்யென, அலையாமை - வருத்தாமை, முன் இனிது - மிக வினிது; கூற்றம் - யமனது, வரவு உண்மை - வருகையின் நிச்சயத்தை, சிந்தித்து வாழ்வு - நினைத்து வாழ்வது, இனிது,—; ஆக்கம் அழியினும் - செல்வமழிந்தாலும், அல்லவை கூறாத - பாவச் சொற்களைச் சொல்லாமைக் கேதுவாகிய, தேர்ச்சியின் - தெளிவினும், தேர்வு இனியது - தெளிவின் இனியது, இல் - பிறிதொன்றில்லை.

வன்மை கண்டு ஏவினல்லது தன்மாட்டு அன்புடைமை கண்டு ஏவி வருத்தினும் வினை முடியாதாகலின் 'ஆற்றானை யாற்றென் றலையாமை' என்றார். இதனை,

'அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவற்பாற் றன்று' (குறள்-௫௧௫.)

என்பதனானுந் தெளிக.

மரணம் வருதலை நினைப்பிற் பாவ வழியில் மனஞ் செல்லாமையின் 'கூற்றம் வரவுண்மை சிந்தித்து வாழ்வு' என்றார். 'பின்றையே நின்றது கூற்றமென் றெண்ணி' என்றார் பிறரும்.

அல்லவை யென்றது பிறர்க்குத் தீங்கு பயக்கும் பொய் முதலியனவும், வருணத்திற்கு உரிய அல்லனவுமாம். அவை கூறின் ஒருவன் மாட்டு ஒழுக்கமின்மை வெளிப்படுதலின் 'கூறாத தேர்ச்சியின்' என்றார்.

'ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்' (குறள்-௱௩௯.)

என்றிருத்தல் காண்க.

கூறாத - காரியத்தின்கண் வந்த பெயரெச்சமாம்.

௩o. கயவரைக் கைகழிந்து வாழ்த லினிதே
யுயர்வுள்ளி யூக்கம் பிறத்த லினிதே
யெளிய ரிவரென் றிகழ்ந்துரையா ராகி
யொளிபட வாழ்த லினிது.

(பழைய உரை) கீழாயினாரைக் கைகடந்து வாழ்தல் இனிது; உயர்ந்த செய்கைகளை நினைந்து ஊக்கமெழுதல் இனிது; எளிய ரிவரென்று இகழ்ந்து பேசாராகிப் புகழ்பட வாழ்தல் இனிது எ - று.

(பதவுரை.) கயவரை - கீழ் மக்களை, கைகழிந்து - நீங்கி, வாழ்தல் - வாழ்வது, இனிது,—; உயர்வு உள்ளி, (தான் மேன் மேல்) உயர்தலை நினைத்து, ஊக்கம் பிறத்தல் -

(ஒருவற்கு) மனவெழுச்சி யுண்டாதல், இனிது,—; ஒலியுர் இவர் என்று - இவர் வறியரென்று, இகழ்ந்து உரையா ராகி - அவமதித்து இழிவுசொல்லாராகி, ஒளிபட வாழ்தல் - புகழுண்டாக வாழ்வது, இனிது,—.

'கை யிகந்து' என்பதூஉம் பாடம்; 'கயவரைக் கையிகந்து வாழ்தல்' என்றார் பிறரும்.

'மனத்தான் மறுவில ரேனுந் தாஞ்சேர்ந்த
வினத்தா லிகழப் படுவர்' (நாலடி-கஅ௦.)

ஆகலின், 'கயவரைக் கைகழிந்து வாழ்த லினிதே' என்றார்.

தன்னை 'நிலையினும், மேன்மே லுயர்த்து நிறுப்பானும்' தானேயாமாகலின், அது செய்தற்கு மனங்கிளர்தல் நன்றென்பார் 'உயர்வுள்ளி யூக்கம் பிறத்த லினிதே' என்றார். இனி, 'உயர்வுள்ளி' என்பதற்குத் 'தான் இருக்கும் உயர்ந்த பதவியை நினைத்து' எனவும், 'உயர்ந்த செய்கைகளை நினைத்து' எனவும் பொருள் கூறுப. ஒளிபட வாழ்தல் ஈண்டு அதற்குக் காரணமாய ஈதலை யுணர்த்தி நின்றது; என்னை? 'ஈத லிசைபட வாழ்தல்' என்றிருத்தலி னென்க. எனவே, 'இகழ்ந்துரையாராகி, யொளிபட வாழ்தல்' என்பதற்கு 'நன்கு மதித்து இனியவை கூறி ஈதல்' என்பது பொருளாயிற்று.

'இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள
முள்ளு ளுவப்ப துடைத்து' (குறள்-க௦டுஎ.)

என்றார் திருக்குறளாசிரியரும்.

௩க. நன்றிப் பயன்றூக்கி வாழ்த லினியினிதே
மன்றக் கொடும்பா டுரையாத மாண்பினிதே
யன்றறிவா ரியாரென் றடைக்கலம் வெளவாத
நன்றியி னன்கினிய தில்.

(பழைய உரை.) ஒருவன் செய்த நன்றியைப் பயன்றூக்கி வாழ்தல் மிக வினிது ; மன்றத்தின்க ணின்று வழக் கழிவு சொல்லாமை மிக வினிது; அடைக் கலம் வைத்தவன்று அறிவார் யார் என்றுசொல்லி அதனை வெளவாத நன்றியே போல மிகவு மினிய தில்லை எ - று.

(பதவுரை.) நன்றி பயன் - (ஒருவன் செய்த) நன்றியின் பயனை, தூக்கி-கருதி, வாழ்தல் - வாழ்வது, இனிது,-; மன்றம் கொடும்பாடு உரையாத—நியாய சபையின்கண் ஓரஞ் சொல்லாத, மாண்பு—மாட்சிமை, இனிது,—; அன்று- (தன் கண் வைத்த) அந்நாள், அறிவார் யார் என்று - அறிவாரொருவருமிலரென்று, அடைக்கலம்—அடைக்கலப் பொருளை, வெளவாத - அபகரியாத, நன்றியின் - நன்மையினும், நன்கு இனியது - மிக வினியது, இல் - பிறிதொன்றில்லை.

> 'செய்தி கொன்றோர்க் குய்தி யில்லெண
> வறம் பாடிற்றே யாயிழை கணவ' (புறம்-ரு௪.)

என்றிருத்தலின், 'நன்றிப் பயன்றூக்கி வாழ்த னனியினிதே' என்றார்.

'மன்றம்' என்புழி அத்துச்சாரியையும் ஏழனுருபுந் தொக்கன.

> 'நன்றிப் பயன்றூக்கா நாணிலியுஞ் சான்றோர்முன்
> மன்றிற் கொடும்பா டுரைப்பானு-நன்றின்றி
> வைத்த வடைக்கலங் கொள்வானு மிம்மூவ
> ரெச்ச மிழந்துவாழ் வார்' (திரிகடுகம்-சூ உ.)

எனவும்,

> 'வேதாளஞ் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே
> பாதாள மூலி படருமே - மூதேவி

சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே
மன்றோரஞ் சொன்னார் மனை' (நல்வழி-உரு.)

எனவும் பிறருங் கூறிய வாற்றான், மன்றக் கொடும்பா டுரை யாத மாண்பினிதே' என்றார்.

சான்றிலதென அடைக்கலப் பொருளை அபகரிப்பின் தெய்வங் கண்டு ஒறுத்தலின் 'அன்றறிவா ரியாரென் றடைக் கலம் வெளவாத, நன்றியி னன்கினிய தில்' என்றார்.

தெய்வங் காணு மென்பதனை,

'வஞ்சித் தொழுகு மதியிலிகா ளியாவரையும்
வஞ்சித்தோ மென்று மகிழன்மின் - வஞ்சித்த
வெங்கு முளனொருவன் காணுங்கொ லென்றஞ்சி
யங்கங் குலைவ தறிவு. (நீதிநெறிவிளக்கம்-கூச.)

என்பதனானும்;

அடைக்கலப்பொருளை அபகரிப்பிற் பெருந்துன்பம் விளையு மென்பதனை,

'அடைக்கலம் வெளவுத லின்னாவாங் கின்னா
அடக்க வடங்காதார் சொல்' (இன்னா-சக.)

என்பதனானுந் தேர்க.

ருஉ. அடைந்தார் துயர்கூரா வாற்ற லினிதே
கடன்கொண்டுஞ் செய்வன செய்த லினிதே
சிறந்தமைந்த கேள்விய ராயினு மாராய்ந்
தறிந்துரைத்த லாற்ற வினிது.

(பழைய உரை.) தம்மை யடைந்தான் துயர் கூராதவாறு ஆற்றல் இனிது; தனிசு கொண்டா யினுஞ் செய்யத் தகுவன செய்தல் இனிது; மிக

வடைந்த கேள்வியராயினும் ஆராய்ந்தறிந்தே ஒன் றைச் சொல்லுதல் இனிது எ - று.

(பதவுரை.) அடைந்தார் - (தம்பால்) அடைக்கலம் புக்கார், துயர் கூரா - துன்ப மிக்கடையாது, ஆற்றல் - செய்வது, இனிது,—; கடன் கொண்டும் - கடன் வாங்கி யும், செய்வன - செய்யத்தக்கவற்றை, செய்தல் - செய்வது, இனிது,—; சிறந்து அமைந்த - மிக்கு நிறைந்த, கேள்வியர் ஆயினும் - நூற்கேள்வியை யுடையராலும், ஆராய்ந்து அறிந்து - ஆராய்ந்தறிந்தே, உரைத்தல்-(ஒன்றைச்) சொல்லு தல், ஆற்ற இனிது - மிக வினிது.

'நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்' என்றார் பிறரும்.

சரணாகத ரக்ஷணஞ் செய்தல் பேரறமென்பார் 'அடைந் தார் துயர்கூரா வாற்ற லினிதே' என்றார். காகாசுர சரணா கதி, சுக்ரீவ சரணாகதி, விபீஷண சரணாகதி முதலிய பல சரணாகதிகளைப் பற்றிக் கூறுதலின் ஒரு சாரார் இராமாயண மென்னும் இதிகாசமுற்றுஞ் சரணாகத சாத்திர மென்பதூ உந் தெரிந்து கொள்க.

கூரா - கூராது என்னும் வினையெச்சம் கடைக்குறை ந்து நின்றது. இனி, அதனை ஈறுகெட்ட எதிர்மறைப் பெய ரெச்ச மெனவும், எதிர்மறை வினையாலணைந்த பெயரென வுங் கொண்டு பொருளுரைப்பாரு முளர்.

செய்யத்தக்கவாவன வருணத்திற்கும் நிலைக்கும் இன் றியமையாதவும் கடமையாயவும் பெரும்பயனுடையவும் பின் இன்பம் பயப்பவும் முதலாயின.

'கடன் கொண்டும்' என்புழி உம்மை இழிவு சிறப்பு.

'அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கா
லின்மை யரிதே வெளிறு' (குறள்-௫0௩.)

என்றவாறு கல்வி கேள்விகளின் மிக்கார் மாட்டும் ஒரோவழி அறியாமை யுளதாகலின், 'சிறந்தமைந்த கேள்விய ராயினு மாராய்ந், தறிந்துரைத்த லாற்ற வினிது' என்றார்.

௩௩. கற்றறிந்தார் கூறுங் கருமப் பொருளினிதே [தே
பற்றமையா வேந்தன்கீழ் வாழாமை முன்னினி
தெற்றென வின்றித் தெளிந்தாரைத் தீங்கூக்காப்
பத்திமையிற் பாங்கினிய தில்.

(பழைய உரை.) நூல்களைக் கற்றுணர்ந்தார் சொல்லுங் கருமப்பொருள் இனிது; பற்றுக்கோடா யமையாத வேந்தன்கீழ் வாழாமை மிகவும் இனிது; தன்மையின்றியே எளியாராய்த் தம்மைத் தேறி யடைந்தாரைத் தீங்கு செய்யாத காதலினன்றாக இனியதில்லை எ - று.

(பதவுரை.) கற்று அறிந்தார் - (நூல்களைக்) கற்று (அவற்றின் பொருளை) உணர்ந்தவர், கூறும் - சொல்லு கின்ற, கருமப்பொருள் - காரியத்தினது பயன், இனிது,—; பற்று அமையா - (குடிகண்மாட்டு) அன்பு வையாத, வேந்தன் கீழ் - அரசன் கீழ், வாழாமை - வாழா திருத்தல், முன் இனிது - மிக வினிது; தெற்றெனவு இன்றி - ஆராய்தலில் லாது, தெளிந்தாரை - (தன் கண்) வினையை வைத்தார்க்கு, தீங்கு ஊக்கா - கெடுதி செய்யாத, பத்திமையின் - அன் புடைமையினும், பாங்கு இனியது - நன்றாக வினியது, இல்- இல்லை.

கூறுங்கால் இனிதன் றெனினும், பயன் இனிதென் பார் 'கருமப்பொருளினிதே' என்றார்.

அரசற்குக் குடிகண்மாட்டன் பில்லையாயின், குறை நீக்கலும் முறை செய்தலும் இலவாகலின், 'பற்றமையா வேந்தன் கீழ் வாழாமை முன்னினிதே' என்றார்.

அரசன் ஒருவன் பிறப்புக் குணம் அறிவு என்பனவற்றையும் செயலையும் காட்சி, கருத்து, ஆகமமென்னும் அளவைகளான் ஆராயாது அவன்கண் வினையை வைப்பின், அவன் அன்புடைய னல்லாக்கால் கெடுதி செய்த லெளிதாகலின், 'தெற்றென வின்றித் தெளிந்தாரைத் தீங்கூக்காப், பத்திமையிற் பாங்கினிய தில்'

என்றார். 'ஊக்காப்பத்திமை' என்புழிப் பெயரெச்சங் காரியத்தின்கண் வந்த தென்க.

நுச. ஊர்முனியா செய்தொழுகு மூக்க மிகவினிதே
தானே மடிந்திராத் தாளாண்மை முன்னினிதே
வாண்மயங்கு மண்டமருண் மாறுத மாமன்னர்
தானை தடுத்த லினிது.

(பழைய உரை.) தானிருக்குமூர் வெறுக்கத் தகாத செயல்களைச் செய்யும் உறுதி மிகவு மினிது; தானே மடிந்திராத முயற்சி மிகவு மினிது; வாண் மிடைந்து மண்டிய வமருள் மீளாத வூக்கத்தினையுடைய மன்னரது தானையை ஒருவன் விலக்குதல் இனிது எ - று.

(பதவுரை.) ஊர் முனியா - ஊரார் வெறுக்காதனவற்றை, செய்து ஒழுகும் - செய்து வருகின்ற, ஊக்கம் - பெருமை, மிக இனிது;—; தானே - (தலைவனாகிய) தானே, மடிந்திரா - (ஒரோவழித் தாமத குணத்தான்

யாவர்க்கும் வருகின்ற சோம்பலின்கண்) வீழ்ந்திராது, தாள் ஆண்மை - முயற்சியை யாளுந்தன்மை, முன் இனிது - மிக வினிது; வாள் மயக்கும் - வாட்கள் (நெருக்கத்தான் ஒன்றோடொன்று) கலக்கின்ற, மண்டு அமருள் - மிக்க போரில், மாறா - மீளாத, மன்னர் - பெருமையுடைய அரசர்களது, தானை - சேனைகள் (பொருதலை), தடுத்தல் - (ஓரரசன்) விலக்குதல், இனிது,—.

முனிதல் - வெறுத்தல், ஊர் முனிதல் - ஒரு படித்தாய் எல்லாரும் வெறுத்தல்.

'கடலி னஞ்சமு துண்டவா கைவிட்டா
லுடலி னூர்கிடந் தூர்முனி பண்டமே'

(தேவாரம்.)

என்ற விடத்தும் 'ஊர் முனி பண்டம்' என்றிருத்தல் கண்டுகொள்க.

'தானே' என்புழி ஏகாரம் சிறப்பு.

எத்துணை யூக்க முடையார்க்குந் தாமத குணத்தான் மடி வருதலியல்பெனினும் அஃது அங்ஙனம் வந்துழி அதன் கண் வீழாது, முயற்சியிற் றலை நிற்றல் நன்றென்பார் 'தானே மடிந்திராத் தாளாண்மை முன்னினிதே' என்றார்.

ருரு. எல்லிப் பொழுது வழங்காமை முன்னினிதே[தே
சொல்லுங்காற் சோர்வின்றிச் சொல்லுதன் மாண்பினி
புல்லிக் கொளினும் பொருளல்லார் தங்கேண்மை
கொள்ளா விடுத லினிது.

(பழைய உரை.) இரவின்கண் வழி போகாமை மிக வினிது; ஒன்றைச் சொல்லும் பொழுது சோர்வு படாமற் சொல்லுதன் மாண்பு இனிது; வலியத் தாங்

கள் வந்து பொருந்தி நட்புக்கொளினும் ஒருபொரு ளாக மதிக்கப்படாதார் கேண்மையைக் கொள்ளாதே நீக்குதல் இனிது எ - று.

(பதவுரை) எல்லி பொழுது - இராவின்கண், வழங் காமை - வழி நடவாமை, முன் இனிது - மிக வினிது; சொல்லுங்கால் - (பலவற்றைச்) சொல்லு மிடத்து, சோர்வு இன்றி - (ஒன்றினும்) மறதியின்றி, சொல்லுதல் - சொல் லுதல் - சொல்வதன், மாண்பு - மாட்சிமை, இனிது,—; புல்லி கொளினும்— (வலியத் தாங்கள் வந்து) பொருந்தி நட் புக் கொள்ளினும், பொருள் அல்லார் - ஒரு பொருளாக மதிக்கப்படாதாருடைய, கேண்மை - நட்பினை, கொள்ளா விடுதல் - கொள்ளாது நீக்குதல், இனிது,—.

விடப்பூச்சிகள் முதலியன சரித்தலானும், பனி முதலி யன நோய் செய்தலானும், 'எல்லிப் பொழுது வழங்காமை முன்னினிதே' என்றார்.

சோர்வு - குற்றமாயின்; சொற்குற்றம், பொருட்குற்றம் உள்ளிட்டன வென்க.

பொருளல்லார் - அறிவிலார் இழிகுலத்தார் என்பர் பரி மேலழகர்.

௩௬. ஒற்றிஞெற்றிப் பொருடெரிதன் முன்னினிதே
முற்ருன் றெரிந்து முறைசெய்தன் முன்னினிதே
பற்றிலனுய்ப் பல்லுயிர்க்கும் பாத்துற்றுப் பாங்
வெற்றிவேல் வேந்தர்க் கினிது. [கறிதல்

(பழைய உரை.) ஒற்றராலே புறம்புள்ள செய்கை களை ஒற்றுவித்தாராயு மாட்சி மன்னர்க் கினிது; செய்வதற்கு முன்னே ஆராய்ந்து முறைசெய்தன் மிக

வும் இனிது ; ஒருவர்க்குப் பற்றிலனாய் எல்லாவுயிர்க்கும் பரிவுற்று நன்மை யறிதல் வென்றியையுடைய வேந்தர்க்கு இனிது எ - று. வெற்றல்—வென்றி.

(பதவுரை.) வெற்றிவேல் – வெற்றியைத் தருகின்ற வேலையுடைய, வேந்தற்கு - அரசனுக்கு, ஒற்றினால் - ஒற்றராலே, ஒற்றி - (எல்லார்கண்ணும் நிகழ்வனவற்றை) ஒற்றுவித்து, பொருள் தெரிதல் - (அவற்றின்) பயனை ஆராய்தலின், மாண்பு - பெருமை, இனிது,—; முன் தான் தெரிந்து - தான் (குற்றத்தை) முன்னர் ஆராய்ந்து, முறை செய்தல் - தண்டஞ் செய்தல், முன் இனிது - மிக வினிது; பற்று இலனாய் - (ஒருவர்க்குப்) பற்றிலனாய், பல் உயிர்க்கும் - எல்லார்க்கும், பாத்து - (அப் பற்றினைப்) பகுத்து, பாங்கு உற்று அறிதல் - எல்லாரிடத்தும் (தானும்) சென்று (குற்றமுளவாயின்) அறிதல், இனிது,—.

'ஒற்றினா னொற்றிப் பொருடெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில்' (குறள்-ருஅ.)

என்றிருத்தலின், 'ஒற்றினா னொற்றிப் பொருடெரிதன் மாண்பினிதே' என்றார். ஒற்றி-பிறவினைப் பொருளின் வந்த தன்வினை; இதனை 'அந்தர்ப்பாவிதணிச்' என்ப வடநூலார். 'முற்றான் றெரிந்து முறைசெய்தன் முன்னினிதே' என்றது, தன் கீழ் வாழ்வார் குற்றஞ் செய்தால் அக் குற்றத்தைத் தான் முன்னர் ஆராயாத அரசற்கு அக் குற்றத்திற்குச் சொல்லிய தண்டத்தை நூலாரோடும் ஆராய்ந்து அதனளவிற்றாகச் செய்தல் கூடாமையி னென்க.

'ஒற்றிற் றெரியா சிறைப்புறத் தோர்துமெனப்
பொற்றோ டணையாத் தெரிந்துங் - குற்ற
மறிவரிதென் றஞ்சுவதே செங்கோன்மை சென்று
முறையிடினுங் கேளாமை யன்று' (நீதிநெறி - ௩௨.)

என்றிருத்தலின், 'உற்றுப் பாங்கறிதல்' என்றுரைக்க. 'வெற்றிவேல்' என்பது கருத்துடையடை; இம்மூன்றையுஞ் செய்யானாயின் அவற்கு வேல் போரின்கண் வெற்றியைத் தாராதென்பது கருத்தாகலின்.

'வெற்றல் வேல்' என்பது பாடாந்தரம். (௩௬)

௩௭. அவ்வித் தழுக்கா றுரையாமை முன்னினிதே
செவ்வியனாய்ச் செற்றுச் சினங்கடிந்து வாழ்வினிதே
கவ்வித்தாங் கொண்டுதாங் கண்டது காமுற்று
வவ்வார் விடுத லினிது.

(பழைய உரை.) மன்னர் மனக்கோட்டஞ் செய்து அழுக்காறு சொல்லாமை மிக வினிது; தன் மனஞ் செவ்வியனாய்ச் சினத்தை வெகுண்டு நீக்கியொழுகுதல் இனிது; யாப்புறக்கொண்டு தாங்கண்ட பொருளைக் காதலித்து வௌவாதொழிதலினன்று எ - று.

(பதவுரை.) அவ்வித்து - மனக்கோட்டஞ் செய்து, அழுக்காறு உரையாமை - பொறாமைச் சொற்களைச் சொல்லாமை, முன் இனிது - மிக வினிது; செவ்வியனாய் - மனக்கோட்ட மிலனாய், சினம் செற்று கடிந்து - கோபத்தைப் பகைத்து நீக்கி, வாழ்வு - வாழ்வது, இனிது,—; கவ்விக்கொண்டு - மனம் அழுந்தி நிற்ப, தாம் கண்டது - தாங்கள் கண்ட பொருளை, காமுற்று - (பெற) விரும்பி, வவ்வார் - (சமயங் கண்டு) அபகரியாதவராய், விடுதல் - (அதனை மறந்து) விடுதல், இனிது,—.

'அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்' (குறள்-௧௬௮.)

ஆகலின், 'அழுக்கா றுரையாமை முன்னினிதே' எனவும்;

'சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னு
மேமப் புணையைச் சுடும்' (குறள்-௩௦௬.)

ஆகலின், 'செற்றுச் சினங்கடிந்து வாழ்வினிதே' எனவும்;

'நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும்' (குறள்-௧௭௧.)

ஆகலின், 'கவ்வித்தாங் கொண்டுதாங் கண்டது காமுற்று, வவ்வார் விடுதலினிது' எனவும் கூறினர். 'கவ்வித்தாங் கொண்டு' என்புழிக் 'கொண்டு' எச்சத்திரி பென்க.

தாம் - அசை. (௩௭).

௩௮. இளமையை மூப்பென் றுணர்த லினிதே
கிளைஞர்மாட் டச்சின்மை கேட்ட லினிதே
தடமென் பணைத்தோட் டளிரிய லாரை
விடமென் றுணர்த லினிது.

(பழைய உரை.) தமக்குள்ள இளமையை மூப்பாகக் கருதி மகிழாமை இனிது; நட்டார்மாட்டு அஞ்சத்தகும் துன்பமில்லாமை கேட்டல் இனிது; மெல்லியதாய்ப் பெருத்த தோளையுடைய தளிரியலாரை நஞ்சென்று கருதல் இனிது எ - று.

கிளைஞர்மாட்டச்சின்மை கேட்டல்—நட்டார்மாட்டு அஞ்சத்தகுந் துன்பமில்லாமை கேட்டல்.

(பதவுரை.) இளமையை - தனக்குள்ள இளமைப் பருவத்தை, மூப்பு என்று - முதுமைப் பருவமென்று, உணர்தல் - நினைத்தல், இனிது,—; கிளைஞர்மாட்டு - சுற்றத்தாரிடத்தே, அச்சு இன்மை - (அச்சத்திற்குக் காரணமாகிய) துன்பமில்லாச் செய்தி, கேட்டல் - உசாவுதல், இனிது,—; தட - பெரிய, மென்மை - மென்மையாகிய, பணை - மூங்கிலை யொத்த, தோள் - தோள்களையும், தளிரியலாரை - தளிரையொத்த மென்மையுமுடைய மகளிரை, விடம் என்று - நஞ்சென்று, உணர்தல் - நினைத்தல், இனிது,—.

'மற்றறிவா நல்வினையை யாமிளைய மென்னாது
கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்ம்மின்
முற்றி யிருந்த கனியொழியத் தீவளியா
னற்கா யுதிர்தலு முண்டு' (நாலடி-கக.)

ஆகலின், 'இளமையை மூப்பென் றுணர்த லினிதே' என்றார்.

'அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று' (குறள்-ருஙஉ.)

ஆகலின், சுற்றத்தைக் கண்டுழி அதன் நன்மை உசாவுதல் நன்றென்பார் 'கிளைஞர் மாட்டச்சின்மை கேட்ட லினிதே' என்றார். இதற்குப் பிறபொருள் கூறுவாரு முளர். 'அச்சின்மையை, 'க்ஷேமசமாச்சார' மெனவும்; 'அச்சின்மை கேட்டலை'க் 'குலசப்ரச்ந' மெனவுங் கூறுப வடமொழிவாணர்.

'தளரியலாரை, விடமென் றுணர்த லினிது' என்றமைக் கேற்பப் பிறரும்,

'அஞ்சனவை வேற்க ணரிவையர்தம் பேராசை
நெஞ்சு புகினொருவர் நீங்குநிலை மைத்தோ
வெஞ்சல்புரி யாதுயிரை யெந்நாளு மீர்ந்திடுமா
னஞ்சமினி தம்மவோர் நாளுநலி யாதே'
(கந்தபுராணம், மார்க்கண்-உ௬.)

'உண்ணாதே யுயிருண்ணா தொருநஞ்சு
சனகியெனும் பெருநஞ் சுன்னைக்
கண்ணாலே நோக்கவே பருகியதே
யுயிர்நீயுங் களப்பட்டாயே' (கம்ப.இராவணன்-உஉ0)

எனக் கூறியிருத்த லுணர்க.

௩௬. சிற்றா ளுடையான் படைக்கல மாண்பினிதே
நட்டா ருடையான் பகையாண்மை முன்னினிதே
யெத்துணையு மாற்ற வினிதென்ப பால்படுங்
கற்றா வுடையான் விருந்து.

(பழைய உரை.) சிற்றாளுடையான் படைக்கல முடையனாதல் மாட்சிமைப்பட இனிது; சுற்றத்தாரை யுடையான் தன் பகைவரோடு பொருதல் இனிது; பாலையுடைய கற்றாவை யுடையான் விருந்து மிகவு மினிது எ - று.

(பதவுரை.) சிற்றாள் உடையான் - சிற்றாளுடையானது, படைக்கலம் - ஆயுதம், மாண்பு இனிது - மாட்சிமைப்பட இனிது; நட்டார் உடையான் - சுற்றத்தாரையுடையானது, பகை ஆண்மை - பகையை யாளுந் தன்மை, முன் இனிது - மிக வினிது; பால்படும் - பால் மிகக் கறக்கும், கன்று ஆ உடையான் - கன்றோடு பொருந்திய பசுவுடையானது, விருந்து,—, எ துணையும் - எல்லா வகையானும், ஆற்ற இனிது - மிக வினிது.

இளம் பருவத்தராகிய வீரரில்வழிப் படைக்கலத்தாற் பயனின்மையின், 'சிற்றாளுடையான் படைக்கல மாண் பினிதே' எனவும்; 'தம்பியரின்றி மாண்டு கிடப்பனே தமையன் மண்மேல்' எனத் தம்பி யொருவன் பரிந்தவாறு சுற்றத்தார் யாவரும் பரிந்து துணை செய்தலின், 'நட்டா ருடையான் பகை யாண்மை முன்னினிதே' எனவும்;

'திண்ண மிரண்டுள்ளே சிக்க வடக்காமற்
பெண்ணின்பா லொன்றைப் பெருக்காம-லுண்ணுங்கா
னீர்கருக்கி மோர் பெருக்கி நெய்யுருக்கி யுண்பவர்தம்
பேருரைக்கிற் போமே பிணி' (தேரையர்)

என்றபடி விருந்தைச் சிறப்பிப்பன உருக்கு நெய்யும், பெருக்கு மோருமாகலின் 'எத்துணையு மாற்ற வினிதென்ப பால்படுங், கற்று வுடையான் விருந்து' எனவுங் கூறினர்.

சo. பிச்சைபுக் குண்பான் பிளிறாமை முன்னினிதே
துச்சி லிருந்து துயர்கூரா மாண்பினிதே
யுற்றபே ராசை கருதி யறனொரூஉ
மொற்க மிலாமை யினிது.

(பழைய உரை.) பிச்சைபுக் குண்பான் வெகுளாமை மிக வினிது; ஒதுக்கிருந்து துன்பமுறாத மாட்சிமை இனிது; மிக்க வூதியங்கருதி அறத்தை நீங்கு மனத்தின்கட் டளர்ச்சி யில்லாமை இனிது எ - று.

(பதவுரை.) பிச்சை புக்கு - பிச்சைக்குச் சென்று, உண்பான் - (இரந்து) உண்பவன், பிளிறாமை-கோபியாமை, முன் இனிது - மிக வினிது; துச்சில் இருந்து - ஒதுக்குக் குடியிருந்து, துயர் கூரா - துன்ப மிக்கடையாத, மாண்பு

மாட்சிமை, இனிது,—; உற்ற பேர் ஆசை கருதி - மிக்க பேராசையைக் கருத்துட்கொண்டு, அறன் ஒரூஉம் - அற வழியினின்று நீங்குதற் கேதுவாகிய, ஒற்கம் - மனத்தளர்ச்சி, இலாமை - இல்லாதிருத்தல், இனிது,—.

'இரப்பான் வெகுளாமை வேண்டு நிரப்பிடும்பை
தானேயுஞ் சாலுங் கரி' (குறள் - ௧0௬0.)

என்றபடி ஈவானுக்கு வேண்டிய பொழுது பொருளுதவா தென்பதற்குத் தன் வறுமையே சான்றாத லறிந்து இரப்ப வன் வெகுளாமை வேண்டு மென்பார் 'பிச்சைபுக்குண் பான் பிளிறாமை முன்னினிதே' என்றார். ஒதுக்குக் குடி யிருத்தல் துன்பத்திற் கேதுவாதலை,

'புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்
டுச்சி லிருந்த வுயிர்க்கு' (குறள்-௩௪0.)

என்பதனானும்,

'நீங்கருந் துயர்செய் வளிமுதன் மூன்ற
னிலையுளே னவைதூரந் திடுமுன்
வாங்கிநின் றனிவீட் குறைகுவான் விரும்பி
வந்தன னின்குறிப் பறியேன்' (சோணசைல—௩.)

என்பதனானுங் கண்டு கொள்க.

மிக்கப் பேராசை நிரம்பும் வரையிற் பேரிடரும், நிரம் பாதாயிற் பேரிடரும், நிரம்பினும் முடிவிற் பேரிடரும் விளைத்தலின் அதனைக் கருத்துட் கொண்டு,

'சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு' (குறள்-௩௧.)

என்றபடி இம்மையினும் மறுமையினும் இன்பம் பெரிதுந் தந்து அந்தமி லின்பத் தழிவில் வீட்டையுந் தரும் அறத்தைக் கைவிடுத லடாதென்பார், 'உற்ற பேராசை கருதி யற

னொரூஉ மொற்க மிலாமை யினிது' என்றார். 'ஒரூஉம்' என்பது காரியத்தின்கண் வந்த பெயரெச்சமாம்.

சக. பத்துக் கொடுத்தும் பதியிருந்து வாழ்வினிதே
வித்துக்குற் றுண்ணா விழுப்ப மிகவினிதே
பற்பல நாளும் பழுதின்றிப் பாங்குடைய
கற்றலிற் காழினிய தில்.

(பழைய உரை.) தானிருக்கும் இறையிற் பத்து மடங்கிறுத்தும் தம் பதியின்கணிருந்து வாழ்தல் இனிதே; நன்மையாய் விளைவிற்குக் காரணங்களைச் சிதைத்துண்ணாத விழுப்பம் மிக வினிது; பலநாளும் நன்மையுடைய நூல்களைப் பழுதுபடாமே கற்றலிற் காழினியதில்லை எ - று.

(பதவுரை) பத்து கொடுத்தும் - பத்துப் பொருள் கொடுத்தாயினும், பதி இருந்து - உள்ளூரிலிருந்து, வாழ்வு - வாழ்தல், இனிது,—; வித்து - விதைக்கென வைத்த தானியத்தை, குற்று உண்ணா - குற்றி யுண்ணாத, விழுப்பம் - சீர்மை, மிக வினிது,—; பற்பல நாளும் - பற்பல நாட்களும் பழுது இன்றி - பழுது படாது, பாங்கு உடைய - நன்மையுடைய நூல்களை, கற்றலின் - கற்பதைப்போல, காழ் இனியது - மிக வினியது, இல் - (வேறொரு செய்கை) இல்லை.

'சில' என்னும் பொருளிற் 'பத்து' என்னுஞ் சொல்லை வழங்குதலுண்மையை, 'பத்தூர்புக் கிரந்துண்டு பலபதிகம் பாடி,' (தேவாரம்), 'எண்ணிப்பத் தங்கை யிட்டா லிந்திரன் மகளு மாங்கே' (சிந்தாமணி, கனகமாலை—சக.) என்பவற்றா னறிக.

'பத்து' என்பதற்குப் 'பத்துப்பொருள்' என்றுரை வகுத்தார் நச்சினார்க்கினியர்.

தன்பாற் குற்றங் கண்டு இனத்தார் கூடிப் பத்துப் பொருள் தண்டம் விதிப்பின் அது கொடாது ஊரைவிட்டுச் செல்லுதலின் அது கொடுத்து ஊரின்கண் வாழ்தலே நன்மையா மென்பார், 'பத்துக் கொடுத்தும் பதியிருந்து வாழ் வினிதே' என்றார். சாதிதருமந் தவறினார்க்கு அச் சாதியார் கூடித் தண்டம் விதித்தலும், அத் தண்டஞ் செலுத்தாராயின் நெருப்பு முதலியன வுதவாதும், வண்ணான் நாவிதன் முதலிய ஊர் வேலை யாட்களைக் கட்டுப்படுத்தியும் அவர் அவ் வூரின் கண் இராதபடி செய்தன் முற்கால வழக் கென்க.

இனி, அரசற்குச் செலுத்தும் உரிய இறைப் பொரு ளொடு பத்துப் பணங் கூட்டிக்கொடுத்தாயினும் உள்ளூர் வாழ்தலினிது' எனப் பொருளுரைப்பினு மமையும். ஒன்றிற் குப் பத்தாகத் தாங்கா இறை கொள்ளுதல் கொடுங்கோன் மன்னன் செய்கையாகலானும், கொடுங்கோன் மன்னன் வாழும் நாட்டினுங் கடும்புலி வாழுங் காடு நன்றாகலானும் 'பத்து' என்பதற்குப் 'பதின்மடங்கு இறை' எனப் பொரு ளுரைத்தல் பொருந்தா தென்க.

வித் தின்றேன் மேல்விளைவு மின்றா மாகலின், வித்துக் குற்றுண்ண விழுப்ப மிகவினிதே' என்றார். உடலொடு அழியாது புண்ணிய பாவங்கள் போல உயிரொடு சென்று,

'ஒருமைக்கட் டாங்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து' (குறள்-கூஅ.)

என்றவாறு, எழுமையினும் துணைசெய்தலின்,

வாழ்நாட்களி னென்றேனும் பழுது படாவாறு கற்பவை கற்க வென்பார் 'பற்பல நாளும் பழுதின்றிப் பாங்குடைய, கற்றலிற் காழினிய தில்' என்றாரென்க.

இனியவை நாற்பது

முற்றிற்று.

---

Printed by C. Munisawmy Mudaliar & Sons, Madras

# அருஞ்சொற்கோவை

| சொல் | செய்யுளெண் | சொல் | செய்யுளெண் |
|---|---|---|---|
| அகறல் | கக | கழிதல் | ந0 |
| அச்சு | நஅ | காட்சி | அறு |
| அதர் | கஉ | காமுறுதல் | உரு |
| அந்தணர் | அ | காண் | ரு |
| அமர்பு | க0 | குதர் | கஉ |
| அவ்வித்தல் | நஎ | குறுதல் | சக |
| ஆக்கம் | உக | கைக் கொடுத்தல் | உ |
| ஆக்குதல் | உ0 | கைத்து | கஉ |
| ஆர்வம் | கூ | கொடும்பாடு | நக |
| ஆற்றுதல் | உகூ | சமம் | கூ |
| உட்கு | உஎ | சலவர் | உக |
| உய்த்தல் | உரு | சவை | உ |
| உரன் | கூ | செற்று | நஎ |
| உழத்தல் | ககூ | சோர்வு | கக |
| ஊக்குதல் | நந | தகையாண்மை | உஅ |
| ஊர்தல் | கூ | தந்திரம் | கக |
| ஊனம் | உஅ | தவசி | கக |
| எஞ்சுதல் | கக | தாளாண்மை | நந |
| எல்லி | நரு | தானம் | கச |
| ஏர்தல் | உ | திரு | கந |
| ஐவாய் | உசு | தீர்தல் | கந |
| ஒல்லும் | உரு | துச்சி | ச0 |
| ஒற்கம் | ச0 | தெற்றவும் | உ |
| ஒற்று | நசு | நட்டார் | உ0, கக |
| கடம் | கக | நவை | ச |
| கடிதல் | நஎ | நிறை | ச |
| கடிது | க | நெடியாமை | ந |
| கடை | கசு | பகையாண்மை | நக |
| கதம் | கூ | பங்கம் | க0 |
| கயவர் | கூ0 | படுதல் | உஅ |
| கலிமா | கூ | பட்டாங்கு | உ0 |
| கவ்வல் | நஎ | பணை | நஅ |

# அருஞ்சொற்கோவை


| சொல் | செய்யுளெண் | சொல் | செய்யுளெண் |
|---|---|---|---|
| பத்திமை | ௩௩ | மறம் | ௧௬ |
| பந்தம் | ௮ | மனை | ௧௬ |
| பயம் | ௭ | மன்று | ௧௬ |
| பற்று | ௨௭ | மன்னுதல் | ௨௧ |
| பாங்கு | ௩௩, ௨௬, ௩௩ | மா | ௨௧ |
| பாத்து | ௩௬ | மாராயம் | ௬ |
| பாற்படுதல் | ௭ | மாறுதல் | ௩௪ |
| பிளிறுமை | ௪ | மானிடவர் | ௧௪ |
| பீடு | ௧௨ | முட்டின்மை | ௨௰ |
| புரிதல் | ௨௨ | முழுமக்கள் | ௧௬ |
| புல்லுதல் | ௨௬ | முறுவல் | ௨ |
| புறங்கூறுதல் | ௨௰ | முனிதல் | ௩௪ |
| பெட்டவை | ௨௩ | வருவாய் | ௨௩ |
| பெருவகை | ௨௩ | வலவைகள் | ௭ |
| பேணுதல் | ௨௰ | வழக்கு | ௩ |
| பேது | ௬ | வறன் | ௧௬ |
| பேராசை | ௪௰ | வாய்ப்பு | ௭ |
| பொறை | ௨௫ | வாழ்தல் | ௨௧ |
| மதன் | ௧௬ | வான் | ௧௬ |
| மயங்கல் | ௩௪ | விடம் | ௩௮ |
| மயரிகள் | ௧௩, ௨௨ | வினை | ௧௫ |
| மலர்தலை | ௨௧ | வெய்துயிர்த்தல் | ௧௫ |


